பார்த்தாய· தத்ஸத்ருச ஸாரதிநா த்வயைவ
யௌ தர்சிதௌ ஸ்வசரணௌ சரணம் வ்ரஜேதி ।
பூயோ(அ)பி மஹ்யமிஹ தௌ கரதர்சிதௌ தே
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ॥

"திருவேங்கடநாதனே! அர்ச்சுனனுக்குத் தேர்ப்பாகனான உன்னால் எத்திருவடிகள் தஞ்சமாகக் காண்பிக்கப்பட்டனவோ, அத்திருவடிகள் மீண்டும் இத்திருமலையில், திருவேங்கடவனாக எழுந்தருளப்பெற்று, அப்பரமனின் திருக்கையினால் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. அந்த புனிதமிகு திருவடிகளையே சரணமாகப் பற்றுகின்றோம்."

—ஸ்ரீவேங்கடேச ப்ரபத்தி - 11



# ஸப்தகிரி

டிசம்பர் -- 1994


தனிப்பிரதி ரூ. 2 மலர் 25
வருடச்சந்தா ரூ. 24 இதழ் 7



சிறப்பாசிரியர் :
திரு. டி.வி.எஸ்.என். மூர்த்தி, ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

பொறுப்பாசிரியர்:
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீபத்மாவதி தாயார் - திருச்சானூர். வண்ண ஓவியம் : செங்காரெட்டி - திருப்பதி

முதல் உள்ளட்டை : ஸ்ரீசரஸ்வதி அலங்காரத்தில் ஸ்ரீபத்மாவதி தாயார்.

2-வது உள்ளட்டை : தெப்போத்ஸவம் - ஸ்ரீகபிலேஸ்வரசுவாமி திருக்கோயில் - திருப்பதி.

பின்னட்டை : பத்ம ஸரோவரம் (திருக்குளம்)-திருச்சானூர்

உள்ளே : கபில தீர்த்தம் - திருப்பதி.



JAGADISH

# உங்களுடன்....

மனிதன் எப்படியாகிலும் தன்னையும், தன் குடும்பத்தையும் மகிழ்ச்சியாக வைத்துக்கொள்ளவே விரும்புகின்றான். பணம் இருப்போர் பலர், வீட்டு விழாக்களையும், பொது விழாக்களையும் பகட்டாக பலர் பார்க்க நடத்தி மகிழ்கிறார்கள். நடுத்தர வர்க்கத்தினரும் கடன் பட்டாவது விழா எடுத்து மகிழ்கின்றனர். இருவகையினரும் ஒரு வகையில் மகிழ்ச்சியை கேட்டு வாங்கி இன்பமடைகின்றனர். அடுத்த நாளே அப்பணக்காரர்கள் வியாபாரத்தில் தான் போட்ட பல இலட்சங்களின் பொருட்டும், தன்னுள் புகுந்து நாளும் வாட்டிடும் வியாதிகளின் பொருட்டும் உணர்ச்சி இறுக்கங்களில் உழன்றிடுகின்றனர். நடுத்தர வர்க்கத்தினரோ, நேற்று வாங்கின கடனை எண்ணி, அதனைத் தீர்த்திடத் தன் வரவு செலவு திட்டத்தை, கவலையுடனும், அச்சத்துடனும், நம்பிக்கையுடனும் ஓர் ஐந்தாண்டு திட்டமாகக் கொண்டு அடுத்த பண்டிகை வரை நாட்களை எண்ணி நகர்த்திடுகின்றனர். இவ்வகையில் சராசரி இந்தியனின் அன்றாட வாழ்க்கை விதிவழியே ஓடிக்கொண்டிருக்கின்றது. 'ஏழை' ஜாதியினருக்கோ, இருந்தால் நாளும் பண்டிகை, இல்லாவிட்டால் நாளும் உழைப்பும், கண்ணீரும்தான் அன்றாட வாழ்க்கையாக அமைகின்றது.

மேற்கூறிய வாழ்க்கையின் மூன்று நிலையினர்க்கும் 'ஒரு சமயமானது' எவ்வகையில் உதவிடும் என்பது ஒரு வினாக்குறியேயாகும். அதுவும் இந்து சமயத்தின் திறவுகோலாக விளங்கிடும் 'கீதை'யானது அவர்களுக்கு எந்த வகையில் பயனுறும் என்பதும் மற்றொரு ஆச்சரியக்குறியாகும். அதுவும் 'ஏழை'க்கு கீதையின் போதனை தேவையா? அதன் அருமையும் பெருமையும் சமுதாயத்தின் மேற்கூறிய இரண்டு நிலையினர் புரிந்து கொள்ளாதவரை அது ஏழைக்குத் தேவையில்லாததுதான். ஏனெனின் ஏழையின் எதிர்காலமானது நிகழ்காலத்து செல்வந்தர்கள், நடுத்தரவர்க்கத்தினரின் ஆற்றல், அறிவு போன்றவற்றின் மீதுதான் ஆதாரப்பட்டுள்ளது. எவ்வகையில் மேலிரண்டு வர்க்கத்தினர்க்கு 'கீதை' உதவிடும் என்பதைக் 'கீதா ஜெயந்தி' கொண்டாடிடும் இம்மாதத்தில் நாம் சற்றே நினைத்துப்பார்த்தால் நம் பிறவிக்கு நாம் பெருமை சேர்த்தோமாவோம்.

நமது 'கீதை' மற்றைய சமய இலக்கியங்களைவிட சிறந்தது, உயர்ந்தது என்று கூறுவதைவிட அக்'கீதை' வழியில் நம் வாழ்க்கையைப் பயன்படுத்திக்கொள்வதே, அக்கண்ணனின் அமுத மொழிக்குப் பெருமையாகும். கீதையைப் பற்றி இம்மண்ணை ஆண்ட ஆங்கிலேயரான 'லாரன் ஹேஸ்டிங்ஸ்' குறிப்பிட்ட போது "இந்தியா, நாளை நம் வசம் இல்லாது போகலாம். ஆனால் அம்மண் தந்த கீதைக்கோட்பாடுகளை நாம் கடை பிடிப்போமேயானால், இங்கிலாந்து எல்லாவகையிலும் மேன்மையுறும்" எனும் கூற்றினை எண்ணிப் பார்த்திடின், இந்தியாவின் ஒரு நல்ல எதிர்காலத்திற்கு 'கீதை' ஒரு சிறந்த உத்தரவாதம் என்பது தெரியவரும்.

உண்டு, உறங்கி, மகிழ்ந்திடும் சமுதாயத்தின் மேல் மட்டத்தினர்க்கு 'எது வாழ்க்கை' என்பதையும், நாளும் பிரச்சனைகளால் தாக்கப்பெற்றுக் குழப்பமும் ஏமாற்றமும் கொண்டு விளங்கிடும் நடுத்தர வர்க்கத்தினர்க்கு 'எப்படி வாழ வேண்டும்' என்பதையும் விளக்கமாக, நுணுக்கமாக கீதை விளக்கி வழிகாட்டுகிறது.

மகிழ்ச்சியில் மனிதன் உலகையே மறப்பதும், துன்பத்தில் மனிதன் தன்னையே மறப்பதும் ஏன்? தன்னல உணர்வின் காரணமாக, உணர்ச்சிகளுக்கு எளிதாக, விரைவாக மனிதன் அடிமையாகிவிடுகின்றான். மனக்கட்டுபாடும் உடல் கட்டுப்பாடும் அமைந்து விளங்கிடும் போது, அவனுடைய ஆற்றல், அறிவு அவனுக்கும், மற்றவர்க்கும் பலவகைகளில் பயன்படுகின்றது. இக்கட்டுப்பாடுகளின் அவசியத்தை கீதை பல இடங்களில்

பலமுறை வலியுறுத்தியுள்ளது. மனிதனை மனிதனாக விளங்கச் செய்வன அவனிடம் உள்ள அறிவு, ஆற்றல், அன்பு எனும் மூன்று அரும் பண்புகளாகும். அத்தகு மனித னையும் உலகையும் இணைத்திடும் ஒரு வாழ்க்கைப்பாலமாக விளங்கிடுவது கீதையாகும். மனிதனிடம் உள்ள ஞானம் எனும் பேரறிவு ஒளிருமேயானால், அவனுடைய பிறவியானது 'முக்தி' எனும் வீட்டுப் பேற்றினை எளிதில் பெற்றிடும். நாளும் மேற்கொள்ளும் கர்மங் களை - வினைகளை பக்தி எனும் தூய உணர்வுடன் மேற்கொண்டால், அவ்ஞானத்தை மனிதன் எளிதில் பெற்றிடலாம். இதைத்தான் கீதை உறுதிப்படுத்துகிறது. கீதையா னது மேலுலக வாழ்க்கையை மனதிற்கொண்டு, இவ்வுலக வாழ்க்கையினை மனிதன் ஒரு துறவி நிலையில் மேற்கொள்ள வேண்டும் என்று கூறவில்லை. மனிதனுடன் பிறந்தன ஆசையும் காமமும். அவற்றை கீதை ஒதுக்கிடச் சொல்லவில்லை. அவையிரண்டும் தர்மத்திற்கு உட்பட்டு அமைந்திட வேண்டும் என்றுதான் கீதை கூறுகிறது. அன் றாட வாழ்வியல் கோட்பாடுகள் தர்மத்திற்கு உட்பட்டு விளங்கிடும் போது, அவன் மேற்கொள்ளும் வினைகளே புனிதமாகின்றன. அதுபோது மனிதன் உணர்ச்சிகளுக்கு அடி மையாவதில்லை. முதலில் மனிதனை மனிதனாகப் பண்படுத்தி அவன் மூலமாகவே அவனை ஒரு ஞானியாகத் திகழச் செய்யவேண்டுமென்பதே கீதையின் குறிக்கோள். கீதை சடங்குகளை ஆதரிக்கவில்லை. அதனால் ஒரு போலி வாழ்க்கையினை உற்சா கப்படுத்வில்லை. உடலை உறுதிப்படுத்தி, உள்ளத்தை உயர்த்தி இறை உண்மையை உணர்த்துகிறது கீதை.

ஆணவத்தின் ஆபத்தினை, அன்பின் பெருமையினை, எளிமையின் அழகினை, கடமை ஈடுபாட்டினை, உழைப்பின் வெற்றியை, குரு உறவு முறையினை, தொண்டின் நீர்மையினை, உடல் மற்றும் உள்ளத்தூய்மையின் அவசியத்தினை, இலட்சிய நோக்கினை, மனக்கட்டுப்பாட்டின் ஆற்றலை, அறிவின் மேன்மையை, இறை உணர்வின் இன்றியமை யாததை பல செய்யுட்களின் மூலம் அக்குருக்ஷேத்திர நாயகன் பறைசாற்றியுள்ளான்.

வாழ்க்கையில் மனிதன் தன்னைப்பற்றி அறிந்துகொள்ள முடியாததால்தான், தன் பங்கு என்ன என்பதை தெரிந்து கொள்ளாததால்தான், அவன் தனக்கும், மற்றவர்க்கும் ஒரு பிரச்சனையாகப் பல நேரங்களில் திகழ்கின்றான். மனிதன் மகிழ்ச்சியில் இருந்திடும் போது அவன் வேண்டுவதோ, தேடுவதோ ஏதும் இருக்காது. ஆனால் துன்பத் தில் துவண்டு விடும் போதுதான், அவனுக்கு ஒரு துணை, வழிகாட்டி தேவை. அவன் மனமே அவனுக்குத் தகுந்த துணை என்பதைக் கீதையை ஒருமுறை தனிமை யில், உள்ளார்ந்த ஒருமுகச் சிந்தனையுடன் படித்துணர்த்தாலே போதும், அவனைவிட மகிழ்ச்சியில் திளைப்பவன் இந்த அவனியில் இருந்திட முடியாது. கரும்பு இனிக்கும் என்று சொன்னால் மட்டும் அதைக்கேட்பவனால் அவ்இனிப்பைச் சுவைத்திட முடியாது. அவனும் அக்கரும்பைக் கடித்திட வேண்டும். ஆம் கீதையின் பெருமை, இராமாயணம், பாகவதம் போன்று பிறர் சொல்லி மகிழ்ந்திட முடியாது. இதை அவரவர் படித்து, உணர்ந்து மகிழ்ந்திடும் ஓர் அற்புதமான வாழ்க்கைத்துணை. அத்துணை ஒன்றுதான் அவனை உயர்த்திட முடியும். அவ்வாறு உயரும் போது, மக்களிடையே பொறாமை, சூது, கோபம், வன்முறை போன்றன தோன்றா. அப்போதுதான் இம்மண்ணில் சமூக, பொருளாதார, அரசியல் துறைகளில் மேம்பாடும், நாகரிகமும் ஒளிரும். அதுவே கீதை தோன்றிட்ட இம்மண்ணுக்குப் பெருமையாகும். ஆம் நம் நாட்டின் உயர்வும், தாழ்வும் 'கீதை' வழி நாம் நம் வாழ்க்கையை அமைத்துக் கொள்வதில்தான் உள்ளது. கண்ண னின் 'கீதை'யை மறந்தவன் தன் வாழ்க்கைப் பாதையை மறந்தவனாவான்.



# திருமலையில் மாபெரும் வேள்வி

--ஓர் அகப்பார்வை

"ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் என்னும் ஸ்தோத்திரம் கங்கா புத்திரரும், ப்ரம்மசாரியுமான பீஷ்மரால் ஸ்ரீபகவானை அடையும் தருணத்தில் பிதா தனது பொக்கிஷத்தைக் குழந்தைகளிடம் ஒப்பிவிப்பது போல ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தை தனது பேரனான தரும புத்ரரிடத்தில் ஒப்புவித்தார். அந்தச் சமயத்தில் ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவும், ப்ரம்ம ரிஷிகளும் மற்றும் பல பக்தர்களும் குரு க்ஷேத்திரத்தில் கூட இருந்து ச்ரவணம் செய்தனர். இந்த உத்தம ஸ்தோத்திரத்திற்கு ஸ்ரீ ஜகத்குரு ஆதிசங்கராச்சார்ய ஸ்வாமிகளும், ஸ்ரீபராசரபட்டரும் மற்றும் பல மஹான்களும் ஸ்ரீபாஷ்யம் செய்திருக்கின்றனர். சாஸ்திரங்களில் ப்ராயச்சித்த ப்ரகரணங்களில் மஹாபாபங்களும், ரோகம் முதலிய கஷ்டங்களும் விலகுவதற்கு ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம ஜபம் விதிக்கப்பட்டிருக்கிறது. இதை ஜபயக்ஞம் என்றே கூறியிருக்கின்றனர். இங்கு ஸ்ரீபீஷ்மர் 'தர்மார்த்தீ ப்ராப்னுயாத் தர்மம்' என்பது முதலால் தர்மம் முதலிய புருஷார்த்தங்களும், புத்ர லாபமும், காந்தியும், யசஸ்ஸும், ஆரோக்யமும் ஆபத் நிவ்ருத்தியும், ஜனன மரணம் முதலிய பய நிவ்ருத்தியும் மோக்ஷமும் ஏற்படுமென்று அளவற்ற பயனைக் கூறியிருக்கின்றார்...... 'வ்யாஸேன கீர்த்திதம்' என்பதால் இதை வ்யாஸாசார்யாள் தனக்கு உபதேசித்தார் என்றும், 'ரிஷிர் நாம்னாம் ஸஹஸ்ரஸ்ய வேத வ்யாஸோ மஹாமுனி:' என்றதால் வேத மந்திரத்தை கண்டறிந்த வ்யாஸர் வேத மந்திரத்திலிருந்து இந்த ஸ்தோத்திரத்தை உணர்ந்து உபதேசித்தார் என்றும், அதனால் வேத மந்திரங்களை ஞான த்ருஷ்டியால் கண்டறிந்த ரிஷிகளும் இதை ஜபித்தார்கள் என்பதை 'ரிஷிபி: பரிகீதானி' என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த நாமாக்கள் ஸகல புருஷார்த்தங்களையும் கொடுக்கும் ஆகையால் அவற்றை உனக்கு உபதேசிக்கின்றேன் என 'தானி வக்ஷ்யாமி பூதயே' என்பதால் சொன்னார்." (ப்ரம்ஹஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் 'ஜய மங்கள ஸ்தோத்திரம்' முன்னுரை.)



இத்தகைய பழமையும் சிறப்பும் மிக்க திவ்விய ஸஹஸ்ரநாமத்திற்கு ஒரு மாபெரும் வேள்வி நடத்தி, எல்லா மக்க

ளுக்கும் தத்தம் கஷ்ட நஷ்டங்களிலிருந்து ஒரு ஸர்வ பிராயச்சித்தமாக அருளியிருக்கிறார் ஸ்ரீஸ்ரீஸ்ரீ திருதண்டி சின்ன ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள்.

சித்தூரில் 29-6-94 அன்று நடைபெற்ற சின்ன ஜீயரின் விஜயத்தில் இந்த மாபெரும் வேள்வியின் அக்கினிப்பிரதிஷ்டை போன்ற முதல் வித்து எழுந்தது. ஆழ்வார் திவ்வியப் பிரபந்த திட்டத்தின் இயக்குனரான டாக்டர் பொன். சௌரிராஜனார் சின்ன ஜீயருக்குத் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் காணிக்கையாக செந்நிற மேலங்கியை அணிவித்து, அஞ்சலி பத்தராய், "திருமலையில் திருமாலின் ஆயிரம் திவ்விய நாமங்களைக் கொண்டு ஒரு மாபெரும் வேள்வியை, 1972ல் நிகழ்ந்த ஸ்ரீலக்ஷ்மி நாராயண ஸஹஸ்ர ஹோம குண்ட க்ரதுவைப் போல, தேவரீருடைய தலைமையில் நடத்த திருமலை திருப்பதி தேவஸ்தான அறங்காவலர் குழுமம் விழைகின்றது" என்றார். இந்த நிகழ்ச்சிக்குப் பின்னர், 7-7-1994 காலை தி.தி. தேவஸ்தான மேலாணை அலுவலர் சென்னையில் சின்ன ஜீயரிடம் ஒரு விரிவான வேள்வி திட்டத்தை முன்மொழிந்து, ஸ்ரீதிருதண்டியாரின் முழு ஒப்புதலையும் பெற்றார். 11-7-1994 அன்று சின்ன ஜீயர் திருமலைக்கு தானே எழுந்தருளியிருந்து, தர்மகிரி வேதபாட சாலை, கோகர்பம் அணைக்கட்டு, எஸ்.வி. மேல்நிலைப் பள்ளி ஆகிய மூன்று இடங்களைப் பார்வையிட்டு, முடிவில் கோகர்பம் நீர்நிலைக்கு அருகிலேயே வேள்வியை நடத்த விரும்பினார். மேலும் இந்த மாபெரும் வேள்வியின் எல்லா கட்டுமானப் பணிகளையும் மேற்பார்வையிட, தன் சாதுர்மாஸ சங்கல்பத்தையும் 22-7-1994 அன்று திருப்பதி மத்திய நூலக வளாகத்திலேயே ஏற்று, இரண்டு மாத காலம் திருப்பதியிலேயே தங்கி கவனித்துக்கொண்டிருந்தார். 19-9-1994 முடிய திருப்பதியிலேயே தங்கியிருந்து, தன் சாதுர்மாஸ சங்கல்பத்தை முடித்துக்கொண்டு, புதுதில்லி, சென்னை, ஸ்ரீரங்கம் ஆகிய நகரங்களுக்குச் சென்று வேதவிற்பன்னர்களையும் பிரபலமானவர்களையும் மடதிபதிகளையும் வேள்விக்கு வருமாறு திருவோலை (அழைப்பு) வழங்கினார். 24-9-1994 அன்று சென்னையில் நடைபெற்ற பத்திரிகையாளர் கூட்டத்தில் "ரூபாய் 5 கோடி செலவில் நடைபெறும் இந்தப் புனிதவேள்வி இதற்கு முன்னர் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக நம் பாரததேச சரித்திரத்தில் நடைபெற்றதில்லை. முதன் முறையாக எல்லா தேவதைகளின் பூரண அநுக்கிரகங்களையும் பெற பன்னிரு வேள்விகளும் (த்வாதச இஷ்டிகளும்) நடைபெறும்" என்று சின்ன ஜீயர் குறிப்பிட்டார். நம் நாட்டில் எழுந்துள்ள குழப்பங்கள் முதல் குடும்ப சச்சரவுகள் வரையிலான எல்லா பிரச்சனைகளுக்கும் தெய்வீக அருளால் நிவர்த்திகள் ஏற்பட்டு எங்கும் அமைதி நிலவ, இந்த மாபெரும் வேள்வி



யில் மஹாசங்கல்பம் செய்யப் படும் என்று சின்ன ஜீயர் தெளிவு படுத்தினார்.

"அஸ்மின் தேசே ஸ்திதானாம் ஸர்வாஸாம் பிரஜானாம் ஸர் வேஷாம் பிராணினாம் ச க்ஷேம ஸ்தைர்ய தைர்ய வீர்ய விஜய அபய ஆயுர் ஆரோக்ய ஐஸ் வரியாபி விருத்தியர்த்தம் தர் மார்த்த காமமோக்ஷ சதுர்வித பல புருஷார்த்த ஸித்தியர்த் தம் ஆத்யாத்மிக, ஆதிதைய்விக, ஆதிபௌதிக தாபத்ரய நிவார ணார்த்தம் ராஜவித்வர பர சக்ர பய அதிவ்ருஷ்டி அநாவ்ருஷ் யாதி ஸமஸ்த ஈதிபாதா ப்ரசம பூர்வக ஸமஸ்த மங்களாவாப்த் யர்த்தம் ஸ்ரீபகவத் ஆக்ஞயா ஸ்ரீபகவத் கைங்கர்ய ரூபத்வேந விஸ்வசாந்த்யர்த்தம் ஸங் கல்பித அஷ்டோத்தர ஸஹஸ்ர குண்டாத்மக த்வாதசாஹ்நிக ஸ்ரீமஹா விஷ்ணுயாகங்க பூதம் அஸ்மின் குண்டே அக்னௌ பகவதாராதனம் கரிஷ்யமாண:

ததாதௌ அக்னிகார்யம் கரிஷ் யாமி" என்று சத்திய சங்கல் பம் திடமாகச் செய்து கொண்ட ஸ்ரீதிருதண்டி சின்ன ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர், இந்த வேள்வியை "விஸ்வ சாந்தி ஸஹஸ்ர குண்டாத்மக ஸ்ரீமஹாவிஷ்ணு யாகம்" என்றே பிரகடனப் படுத்தினார்.



திருமலையில் ஏன் இந்த மாபெரும் வேள்வியை நடத்த வேண்டும் என்ற ஒரு பத்திரி கையாளரின் வினாவுக்கு விடை யளித்த சின்ன ஜீயர் திருவேங்க டத்தின் சிறப்பையும் விளக்கிச் சொன்னார்:

திவ்விய தேசங்கள் 108ல் மிகப்பழமையும் பிரசித்தி பெற்ற பிரார்த்தனை ஸ்தலமாக வும் விளங்கும் திருவேங்க டத்தில் (வேம்-வெம்மையாகிய பாவங்களை, கடகடக்கச்செய் யும் தெய்வத்தன்மை பெற்றது) ஒவ்வொரு வேள்வியும் ஒரு கோடி மடங்கு புண்ணிய மாகும் என்று நம் புராணங் கள் ஏகோபித்து எடுத்துரைக் கின்றன. இந்த மாபெரும் வேள்வி ஸ்ரீபாஞ்சராத்திர ஆகம விதிப்படி நடைபெறும் என்றும் சின்ன ஜீயர் அறிவித்தார்.

சுமார் 3000 வேத விற்பன்னர் கள் நாடெங்கிலுமிருந்து திரு மலைக்கு வந்திருந்து, அக்டோ பர் 14ம் நாள் விஜயதசமி நன்னாளன்று வேத பாராய ணங்களுடன் சின்ன ஜீயரின் மேற்பார்வையில் இந்த வேள்வி தொடங்கியது. (இதற்கு முன் னரே பஞ்சமி நன்னாளன்று யாக சாலையில் வாஸ்து நன் னாளன்று யாகசாலையில் வாஸ்து ஹோமம் செய்யப் பட்டு, புனிதத் தன்மை நிலை பெறச் செய்யப்பட்டது.)

திருமலைக் கோவிலுக்குச் சென்று சின்ன ஜீயர் திருவேங் கடமுடையானின் அனுக்ஞை (யக்ஞம் நடத்தமுன் அனும தியை) அன்று மாலை பெற் றார். அர்ச்சகர்கள், தேவஸ்

தான அலுவலர்கள் எல்லோருக்கும் சால்வைகளைப் போர்த்தி பரிசுகளையும் வழுங்கி, யக்ஞத்திற்கு வந்திருந்து அருளாசி பெறுமாறு அழைப்பு விடுத்தார். வேள்விக்கு வந்திருந்த வேதவிற்பன்னர்களும் பிற பக்தர்களும் புடைசூழ மாடவீதியை பிரதக்ஷிணமாக வலம் வந்து, பின்னர் கோகர்ப்பம் அணைக்கட்டுக்கு அருகில் அமைக்கப்பட்டிருந்த யாகசாலைக்குச் சென்றார். அன்று மாலை அங்கு விஸ்வக்ஷேண ஆராதனையும் ஆசாரிய வரணமும் முதலில் நிறைவேற்றினார். ஸ்ரீமான் சிலகமர்ரி ஸ்ரீனிவாசாசாரியர் என்னும் முதிர்ந்த வேதபண்டிதர் இந்த வேள்விகளுக்குத் தலைமை யக்ஞாசாரியராக நியமிக்கப்பட்டு, கங்கண தாரணம் ஏற்றார். பின்னர் மிருத் சங்கிரஹணமும் அங்குரார்ப்பண ஹோமமும் துவார தேவதா பிரதிஷ்டைகளும் பலிபிரதானமும் நடைபெற்றன.

மறுநாள் ஏகாதசியன்று எல்லா வேள்விக்கூடங்களிலும் அக்கினி ஸ்தாபிக்கப்பட்டு, கும்ப (கலச)ங்களை நிறுவி, ஒவ்வொரு கூடத்திற்கும் தனித்தனி ரித்விக்குகள் (வேள்வி செய்வோர்), ஹோதாக்கள் (மந்திரங்களைச் சொல்லுவோர்), உபத்ரஷ்டாக்கள் (மேற்பார்வையாளர்கள்) நியமனம் செய்யப்பட்டனர். இவர்களுக்கு மஞ்சள்நிற வஸ்திரங்கள் பொன் கங்கணங்கள் வழுங்கப்பட்டன. (இதைத் தவிர புகைப்படத்துடன் கூடிய அடையாள அட்டைகளும் வழங்கப்பட்டன). அன்றே 200 பக்தர்களால் தொடர் விஷ்ணு ஸஹஸ்ரநாம (24 மணிநேர) பாராயணமும் "ஹரேராம" சங்கீர்த்தனமும் தொடங்கி வைக்கப்பட்டன.

திவ்வியப்பிரபந்த சேவா காலத்துடன் சின்ன ஜீயர் 17-10-94 அன்று காலை நாராயண அனுவாகம் முன் மொழிந்து ஸங்கல்பத்தை ஒலிப்பரப்பி, பஞ்ச சூக்த ஹோமங்களுடன் ஒவ்வொரு நாமாவளிக்கும் தனித்தனி வேள்விகளை ஆரம்பித்து மங்களாசாஸனம் செய்தருளினார். நண்பகல் வரையிலாக இவை தொடர, இடையில் சமூகிக அஷ்டோத்தர சதநாம அர்ச்சனைகளை பிரவசன மண்டபத்தில் நடத்தினார். இந்த அர்ச்சனைகள் எல்லா நாட்களும் நடந்தன. 23-10-94 முதல் தங்க மலரால் ஸ்ரீராமருக்குச் சின்னஜீயரால் சிறப்பு அர்ச்சனை நிகழ்த்தப்பட்டது.

மாலையில் விஷ்ணு ஸஹஸ்ர நாம பாராயணம் சின்ன ஜீயர் தலைமையில் கூட்டாக நடைபெற்று பின்னர் 1008 வேள்வி சாலைகளிலும் தொடர்ந்து பஞ்ச சூக்த ஹோமங்களும் பலமுறை ஸ்ரீசூக்த ஹோமமும் பின்னர் தனித்தனி நாமாவளி ஹோமங்களும் நடைபெற்றன. முடிவில் பூர்ணாஹுதியுடன் சாற்றுமுறைகளுடன் வேள்விகள் நிறைவேற்றப்பட்டன.

தொடர் நிகழ்ச்சியாக எல்லா வேதங்களும், இதிஹாஸ, புராணங்களும் நாலாயிரத் திவ்விய பிரபந்தமும், சுமார் 400க்கும் மேற்பட்ட வைதீகர்களால் அநுசந்திக்கப்பட்டன. சின்ன ஜீயரின் தலைமையில் பல்வேறு தலைப்புகளில் உபன்னியாஸங்களும் இருவேளைகளிலும் நடந்தன.

ததியாராதனைகள் பல்வேறு இடங்களில் நடைபெற்றன. அவற்றுள் திருமலை பெரிய ஜீயர் மற்றும் சிறிய கேள்வியப்பவன் ஜீயர் ஸ்வாமிகளின் திருமாளிகைகளில் நடைபெற்ற ததியர் ஆராதனை எல்லோராலும் நன்கு போற்றப்பட்டது. வைதீகர்களும் பாகவதர்களும் ஆயி



ரக்கணக்கில் குழுமியிருந்து வரிசையாக அமர்ந்து, காலையில் சிற்றுண்டி (காபியும் பொங்கலும்) நண்பகலில் விருந்து, இரவில் முழு போசனம் செய்தனர். வந்தவர்கள் எல்லோரையும் இன்முகத்துடன் வரவேற்று நன்கு உபசரித்து இந்த மாபெரும் வேள்வியின் திரண்ட பயனை நம் திருமலை ஜீயர் ஸ்வாமிகளே பெற்றனர் எனலாம். ஸ்ரீஅகோபில மடத்தினரும் பரகால மடத்தினரும் இவ்வரிய வாய்ப்பினை நழுவ விடாமல் தத்தம் நெறிகளுக்கு ஏற்ப பயன்படுத்திக்கொண்டு, வைதீகர்களைத் திரளாக ஆதரித்தனர். யாகசாலையை ஒட்டி அமைந்த அன்னதானக்கூடங்களில் எண்ணற்ற ஏழை எளிய மக்களுக்கு காலவரம்பின்றி பிரசாதங்கள் வழங்கப்பட்டன.

வேள்வி நடைபெற்ற பன்னிரண்டு நாட்களிலும் இஷ்டி என்றழைக்கப்படும் விருப்ப வேள்விகள் தொடர்ந்து ஒரு தனி யாகசாலையில் நிறைவேறியன. அவை:

1. ஸுதர்சன இஷ்டி-எல்லா வியாதிகளையும் போக்குவதுடன் தேகாரோக்யத்தைத் தருவது. (17-10-94)

2. வாஸுதேவ இஷ்டி-தீர்க்காயுஸ், எல்லா விதமான இடையூறுகளும் நீங்குவது. (18-10-94)

3. வைஷ்ணவ இஷ்டி-புனிதத் தன்மை பெறுவது. யாகங்களுக்குத் தகுதி உள்ளவனாதல். (19-10-94)

4. வைபவ இஷ்டி-பரம்பரை பரம்பரையாகக் குடும்பத்தினர் அனைவரையும் புனிதமாக்குவது. (20-10-94)

5. வைநதேய இஷ்டி-புத்ர காமேஷ்டி. நல்ல குழந்தைகள் பிறப்பதற்காக. (21-10-94)

6. லக்ஷ்மி நாராயண இஷ்டி-வறுமை நீங்கி செல்வச் செழிப்பு ஏற்படுவதற்காக (22-10-94)

7. ஹயக்ரீவ இஷ்டி-அனைத்து வித்யைகளும் பதமாக. (23-10-94)

8. ஸ்ரீநருஸிம்ம இஷ்டி-துஷ்ட க்ரஹ பீடைகள் எல்லாம் நீங்க. (24-10-94)

9. பரமேஷ்டி-ஸர்வரோக நிவாரணம் (25-10-94)

10. வையூஹ இஷ்டி-வெள்ளச் சேதம், வறட்சி ஆகியவை ஏற்படாமலிருக்கவும், பூகம்பம், புயல் முதலிய இயற்கை உத்பாதங்கள் ஏற்படாமலிருக்கவும். (26-10-94)

11. விஷ்வக்சேன இஷ்டி-சத்ரு நாசம் ஏற்படுவதுடன் எங்கும் எதிலும் வெற்றி கிட்டுவதற்கு. (27-10-94)

12. ஸ்ரீமந்-நாராயண இஷ்டி-ஸர்வ பாதகங்களும், உபபாதகங்களும் நீங்குவதுடன் உலக அமைதி ஏற்படுவதற்காக. (28-10-94)



வேள்வியைச் சிறப்பிக்கும் வண்ணம் திருவேங்கடமுடையானின் திருவீதி உலா மூன்று நாட்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்டன. அவை: 17-10-94 இரவு 9 மணிக்கு அநுமந்த வாகனம்;

20-10-94 மாலை 5 மணிக்குத தங்கத்தேர்; 23-10-94 இரவு 9 மணிக்குக் கருட சேவை.

நாட்டிய இன்னிசை சொற்பொழிவுகள் எல்லா நாட்களிலும் தி.தி. தேவஸ்தான ஆஸ்தான மண்டபத்தில் நடைபெற்று வந்தன. இவை காலை 8 மணி முதற்கொண்டு இரவு 11 மணி வரையிலும் தொடர்ந்த வண்ணம் இருந்தன.

வேள்வியின் சிறப்பு வெளியீடாக சின்ன ஜீயரின் ஸ்ரீமத் பகவத்கீதையின் தெலுங்கு உரை நூல் "பொற்பரிசு" ("GOLDEN GIFT") என்னும் தலைப்பில் 23-10-94 ஞாயிறன்று மாலை வெளியிடப்பட்டது. வேள்வியின் நினைவுமலர் ((SOU-VENIR) அச்சில் உள்ளதால் பின்னர் வெளிக்கொணரப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீசங்கர விஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளும், மைசூர் பரகால மடம் ஜீயர் ஸ்வாமிகளும், அகோபில மடத்து அழகியசிங்கர் ஜீயர் ஸ்வாமிகளும், சின்ன ஜீயரின் ஆசாரிய மடமான ஸ்ரீபெரும்பூதூர் வரதராமாநுஜ யதிராஜ ஜீயர் ஸ்வாமிகளும், திருமலை பெரிய கேள்வியப்பன் ஸ்ரீகோவிந்த ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகளும், திருமலை சிறிய கேள்வி அப்பன் ஜீயர் ஸ்வாமிகளும் இந்த வேள்விக்குத் தங்கள் வருகையால் சிறப்பை நல்கினர். ஆந்திர மாநில முன்னாள் முதலமைச்சர் திரு. என்.டி. இராமாராவ் அவர்களும் இன்றைய முதலமைச்சர் திரு. கோட்ல விஜய பாஸ்கர்ரெட்டி அவர்களும் ஒரு நாள் யாக நிகழ்ச்சிகளைப் பார்வையிட்டனர்.

மஹாபூர்ணாஹுதி 28-10-94 வெள்ளிக்கிழமை நண்பகல் 2 மணிக்கு நடைபெற்றது. பின்னர் ஸ்ரீசீதாராமகல்யாணம் பிரவசன மண்டபத்தில் நிகழ்த்தப்பட்டு, வேதவிற்பன்னர்களுக்குச் சன்மானமும் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன. சின்ன ஜீயர் அவபிருத தீர்த்தமாடி, திருவேங்கடமுடையானைச் சேவித்தார்.

சின்ன ஜீயரின் திருவவதார நாளைத் (துலா-சுவாதி திருநக்ஷத்திரம்) திருப்பதி திருவேங்கடவன் மைய நூலக வளாகத்திலேயே கொண்டாடி, மூன்றுநாட்கள் ஸ்ரீசுதர்ஸன ஹோமம் செய்து, திருமலை திருப்பதி தேவஸ்தான அலுவலர்கள் எல்லோருக்கும் நினைவுப்பரிசுகள் வழங்கினர் இவ் வேள்வியின் அமைப்பாளர்கள். சிரஞ்சீவி சமுத்ராஸ நரசிம்மாசாரியர் என்னும் பதினெட்டு வயதே நிரம்பிய இளைஞர், ஸ்ரீசின்ன ஜீயரின் அருளாணைக்கிணங்கி, ஜீயரின் திருநக்ஷத்திர திருநாளையொட்டி ஸ்ரீசுதர்ஸன ஹோமத்தை (3,4,5 நவம்பர் நாட்களில்). ஒரு லக்ஷம் ஆவர்த்திகளுடன் நன்கு நிறைவேற்றினார். சின்ன ஜீயரிடம் பெருமதிப்புள்ள வேதபாடசாலை மாணவர்கள் அனைவரும் இந்த வேள்வியில் பொலிவுடன் கலந்து கொண்டனர்.

நாளொன்றுக்குச் சுமார் 70,000 மக்கள் திரளாகக் குழுமி, அநுபவித்த இந்த வேள்வியில், திருப்பதியிலுள்ள 'ஸ்ரீவேங்கடேஸ்வரா' மருத்துவ கல்லூரி மற்றும் ஆராய்ச்சி நிறுவனத்தின் உதவியுடன் எல்லா நாட்களிலும் அவசர மருத்துவ உதவி செய்துவந்தனர். உடனுக்குடன் நிவாரணம் கிடைக்கப்பெற்றதனால், யாரும் நிரந்தர உபாதைகளுக்கு ஆளாகவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த மாபெரும் வேள்வியை தி.தி. தேவஸ்தானம் உதவியுடன் ஸ்ரீஸ்ரீஸ்ரீ திருதண்டி சின்ன ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியே ஏற்று நிறைவேற்றியது போற்றுதற்குரியதாக விளங்கியது.

**யத்ராஷ்டாக்ஷர ஸம்ஸித்தோ**
**மஹாபாகோ மஹீயதே ।**
**ந தத்ர சஞ்சரிஷ்யந்தி**
**வ்யாதி துர்பிக்ஷ தஸ்கரா: ॥**

"எந்த தேசத்தில் அஷ்டாக்ஷர ஸித்தியுடையனாயும் மிக்க பாக்யசாலியுமான பாகவதன் பூஜிக்கப்படுகிறானோ அந்த தேசத்தில் நோய் நொடிகள் திருட்டுகள் முதலானவை அணுகுவதில்லை".

தகவல்: ஏ. சுந்தரராஜன்,
சித்தூர்.

திருவாரூர் திருக்கோவிலின் சுற்றளவும் கமலாலய திருக்குளத்தின் சுற்றளவும் ஒரே அளவில் அமைந்துள்ளன.

தஞ்சையில் பெரிய கோவிலும், ஜயம் கொண்ட சோழபுரம் கோவிலும் ஒரே மாதிரியாகக் கட்டப்பட்டவைகளாகும்.

அனுப்பியவர் : எம்.எஸ். பிச்சுமணி - சென்னை-56

# ஆண்டாளின் ஸத்திய தரிசனம்

மகரம்

[illegible] என்ற சிறந்த ஆங்கிலேயக் கவிஞர் மனித வாழ்க்கையைப் பற்றி ஒரு இடத்தில் சித்தரித்திருக்கிறார். "On the earth a broken arch" என்பதுதான் அது. "வட்டத்திலிருந்து தெறித்துவிழுந்த சிதைவு ஒன்றை நான் பார்க்கிறேன்; வேறொரு இடத்தில் சிதைந்து துண்டாக இருக்கும் வட்டப் பகுதி முழுமையை, நிறைவை பெற்று விடுகிறது; இது சத்தியப்பொருளாக மாறி விடுகிறது. 'In the Heaven a perfect Round' மண்ணுலகிற்கு அப்பால் உள்ள இடத்தில் போய்த் துண்டு சேருகையில் நிறைவு அல்லது முழுத்தன்மை அல்லது பூரணத்துவம் பெற்று விடுகிறது" என்கிறான் கவிஞன்.

## ஞானியர் வரிசை

நம் வாழ்க்கையின் லக்ஷணத்தையே இந்தக் கவிஞனின் கருத்தில் நாம் பார்க்கிறோம். நம் வாழ்க்கையைக் குறித்து நாம் சரிவர எண்ணுவதில்லை. ஆனால் ஒரு சிலர் சிதைந்த துண்டாக உள்ள வாழ்க்கையை நடத்துகையில் பூரணத்துவம் எய்திட ஆசைப்படுகிறார்கள். விடாமுயற்சி, தவம் முதலியவற்றினால் தங்கள் ஆர்வத்தைப் பெற்றும் வருகிறார்கள். மண்ணுலகிலேயே நிறைவை காண்கையில் பிரபஞ்சத்தில் ஒவ்வொன்றும் நிறைவு உடையனவாகவே படுகிறது. அவர்களுக்குப் பிரதி காக்கையின் நிறமும் "நந்தலாலா" தான். மனிதனின் உடல் வேதனையோ அல்லது மன வேதனையோ இன்பம் உடையதாய், பூரணத்துவம் நிறைந்ததாக மாறிவிடுகிறது. இத்தகையோருக்கு மண்ணுலக வாழ்க்கை சிதைந்த துண்டு அல்ல; பேரின்ப வாழ்க்கையே அது. இப்படிப் பட்டவர்களே ஞானியர்; இந்த வரிசையில் தோன்றியவளே ஆண்டாள்.

'மகரம்' எனும் புனைப்பெயரில், தனது தொண்ணூறாவது வயதில் இக்கட்டுரையை எழுதியுள்ள திரு. எம்.பி. ஸ்ரீநிவாசன் அவர்கள் 1925 முதல் 1929 வரை தமிழ் 'ஸ்வராஜ்யா' மற்றும் 1930 முதல் தான் ஓய்வு பெற்ற 1964ஆம் ஆண்டு வரை 'சுதேசமித்திரன்' ஆகிய பத்திரிகைகளில் துணையாசிரியராகப் பணியாற்றியவர். மூதறிஞர் திரு. இராஜாஜி அவர்களுடன் நெருங்கிய தொடர்பு உடையவர்.

## மண்ணின் வயிற்றில் அவதாரம்

அவள் ஸ்ரீவில்லிப்புத்தூரில் தோன்றியதாகக் கதை. சிறிய ஊர்தான் அது; இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஆண்டாள் ...க்கதாகப் பேசுகிறார்கள்; பிறவாமல் பிறந்ததாகவே உரைக்கிறார்கள். நந்தவனத்தில் துளசிச்செடியின் அடியில் அவளை அடியார் பெரியாழ்வார் கண்டெடுத்ததாகக் கொண்டாடுகிறோம். மண்ணின் வயிற்றிலே அவதரித்ததாக வைஷ்ணவர்கள் எண்ணிப் பெருமிதம் அடைகிறார்கள். ஆழ்வாரின் பராமரிப்பில் வளர்ந்து வந்த போது ஆண்டாளுக்கு எல்லோரையும் போலவே பருவகாலம் ஏற்படுகிறது. அவளோ நம்மைப் போன்ற மண வாழ்க்கையில் கருத்து ஊன்றாமல் நாம் உணராமல் உள்ள நிலைமையை உணர்ந்து இறைவனுக்கே மனைவியாக ஆகிவிட ஆசைப்பட்டாள்.

எல்லா உயிர்களுமே பெண் தன்மை உடையன. ஆண்டவனைப் பொறுத்தவரையில் அவன் ஒருவனே ஆளப்பிறந்தவன். இந்த நிலைமையை அனுபவமாகப் பெற நினைத்தாள் ஆண்டாள். ஆண்டவனையே கணவனாக வரித்தாள். இது சொல்லளவிலே சுலபம். இதை அனுபவமாக்குவதற்குள் ஆண்டாள் பட்டபாடு கொஞ்சநஞ்சமல்ல. இப்படியும் உண்டோ என்று பெரியாழ்வார் எண்ணினார். ஆனால் பக்தரானதால் ஆண்டாளின் மனோநிலைமையையும் வேட்கையையும் நன்கு புரிந்து கொண்டார். சிறிது காலத்துக்குப் பின்னர் திருவரங்கத்து அமுதன் ஆண்டாளை ஆட்கொண்டான் — அவன் ஒளியிலே அவள் மறைந்தாள். இதுவே ஆண்டாள் சரித்திரம்.

## பிறவாமல் பிறந்த தத்துவம்

ஆனால் இதெல்லாம் உண்மையாக இருக்குமா? இது வெறும் கட்டுக்கதைதான் என்று இன்று சிலர் பேசுவர். உண்மையோ இல்லையோ ஸ்ரீவைஷ்ணவர்கள் உள்ளூர நம்புகிறார்கள். அசைவற்ற நம்பிக்கையில் ஆழ்கிறார்கள். நாம் சில நிகழ்ச்சிகளைப் பற்றி நினைக்கிறோம். அவற்றைக் கோர்வைப்படுத்தி "வரலாறு" என்று சொன்னால் உண்மை என்று எண்ணுகிறோம். நிகழ்ச்சிகளை மட்டும் உண்மையாக நம்பி ஏமாறுகிறோம். அப்படி எண்ண வேண்டிய அவசியமே இல்லை. ஆண்டாள் பாடிய 170 பாசுரங்களை உள்ளத்தில் கொண்டு ஊன்றிப்பார்ப்போமானால் உண்மை தான் என்று நன்குப் புலப்படும். மண்ணுலகின் சாயையே துளிக்கூட இல்லாத வியக்தி. ஆண்டாள் நம்மைப் போல் பிறக்கவில்லை; பிறவாமல் பிறந்த தத்துவமே இதுதான்.

## சொல்லுக்கும் அப்பாற்பட்ட பரம்பொருள்

இறைவனை அவள் கண்டு விட்டாள் என்பது ஆண்டாளின் பாடல்களிலிருந்து தெரிகிறது; பாடல்களில் தேங்கிக் கிடக்கும் ஸத்தியத்தை ஒருவாறாகத் தொகுத்துக் காட்டியிருக்கிறாள். 170 பாசுரங்களும் அவளுடைய சுயசரிதம். வெளி நிகழ்ச்சிகளைப் பற்றிப் பேசாமல் உள் உலகைப் பற்றித்தான் பேசுகின்றன. இதுவே அவளது "ஸத்திய த...." இறைவனைக்காண வேண்டுமென்ற ...க்கிலிருந்து தொடங்குகிறது அவள் சரித்திரம். கருத்துடன் கலந்தாள்; கருத்து வேறு, தான் வேறு என்று அவள் எண்ணவில்லை. பாடல்களில் உள்ள கனிவு, பரவசம் இவற்றைப் பற்றி நாம் ஒரு சிறிது எண்ணினாலும் போதும், காலம், கருத்து, வேகம் எல்லாம் மாறி விடும். பாடல்களின் மூலமாக சொல்லுக்கும் கருத்துக்கும் அப்பாற்பட்ட பரம்பொருளைப் பற்றி ஞானிகள் பேசுகிறார்கள். அவர்கள் வாழ்ந்த நாட்டின் செய்திகளைப் பரக்கக்காணலாம்.

## பாவை நோன்பு

ஆண்டாள் பாசுரங்களில் வட நாட்டிலிருந்து மழை வருகிறது; தமிழ் நாட்டிற்கு வடக்கே இருந்து வரும் கரிய மேகங்கள் திரண்டு, மழை பொழியும் காட்சியைப் பார்க்கிறார்கள். தண்ணீர் எடுத்து வருவதற்காகக் கிராமப் பெண்கள் செல்லும் காட்சியைக் கவனிக்கிறாள். "தைந்நீராடல்" அந்நாளில் வழக்கம்; இது ஒரு நோன்பு; இது தை மாதத்தில் முடிவடையும் "பாவை நோன்பு" என்று இதற்குப் பெயர். "காத்யாயினி விரதம்" என்றும் சொல்லுவார்கள் ஸம்ஸ்கிருதத்தில். தங்களுக்குத் தகுந்த கணவன்மார் கிடைக்கவேண்டும் என்பதற்காக நோன்பு கொண்டாடுவர். சேற்றுத் தண்ணீரில் சந்திரன் தோன்றுவது போல் ஆண்டாள் இந்நோன்பைப் பற்றிப் பேசுகிறாள். எல்லாம் தமிழ்நாட்டுச்செய்திகளே. தூபம் கமழ்கிறது; எருமைகள் செல்கின்றன. கோட்டுக்கால் கட்டிலைப் பார்க்கிறார்கள். போவான் போகின்

றாரை அழைக்கிறார்கள். தமிழ் நாட்டுத் தாமரை, தூபம், தீபம், மழை எல்லாவற்றையும் காண்கிறோம். உண்மையில் இவற்றைப் பற்றி ஆண்டாள் பேசவில்லை; ஆண்டவனைப் பற்றிச் சொல்லுவதற்காக இவை அனைத்தும் அவளுக்குக் கருவிகளாக அமைந்தன.

## ஆர்வம் வெளிப்படுகிறது

நோன்பில் தன்னையும் ஒருத்தியாகச் சேர்த்துக் கொண்டு சொல்லுகிறாள்; இதற்கு இன்னொருத்தி பதில் கூறுவதாகவும் காட்டப்பட்டிருக்கிறது. மாயனை, மன்னு வடமதுரை மைந்தனை மனத்தில் வைத்து ஆண்டாள் இந்நோன்பை நூற்கிறாள். "போயபிழையும், தீயினில் தூசாகும்" என்று செப்புகிறாள். அவனைத்தேடிப் பெற்று விட்டால் நித்தியமான ஆனந்தம் கிட்டும்; பிறப்பே அற்றும்போகும் என்ற முறையில் தனக்கு இருந்த ஆத்திரத்தை அல்லது ஆர்வத்தை ஆண்டாள் வெளிப்படுத்துகிறாள். இதுதான் திருப்பாவை; முப்பது பாடல்களினால் ஆனவை. ஒரே ஒரு பாடலை மட்டுமே சொல்லிக் கொண்டிருக்கலாம். ஒரு நாள் அல்ல; ஒரு மாதம் அல்ல; பலமாதங்கள் அல்ல; ஒரு வருஷம் அல்ல; ஆயுட்காலம் முழுவதுமே சொல்லிக் கொண்டிருக்கலாம். "கும்பகர்ணனும் தோற்றுப்பெருந்துயில்தான் தந்தானோ" என்று நம்மைப் பார்த்துக் கேட்டிருக்கிறாள் நாச்சியார்.

பாட்டை வைத்துக் கொண்டு இறைவனைத் தேடிச் செல்கிறாள் என்று எப்படிச் சொல்லுவது? பாஷாஞானம் நிறைந்த பாட்டுக்களுக்கும் இறைவன் பற்று நிறைந்த பாட்டுகளுக்கும் எவ்வாறு வேறுபாடு காண்பது? இதை நம்முடைய காதும் உள்ளமும் நன்கு சொல்லும். அனுபவித்துச் சொல்லும் சொல்லுக்கும், போலியாக ஏமாற்றமாகச் சொல்லப்படும் சொல்லுக்கும் வித்தியாசம் நன்றாகத் தெரியும். அனுபவச் சொற்கள் ஸத்தியத்தில் பிறப்பன; இறைவனிடம் உள்ள ஆழ்ந்த பக்தியினால் உண்மையை நேரில் கண்டுதான் ஆண்டாள் பேசுகிறாள் என்பது சந்தேகத்துக்கு இடமில்லாமல் புலனாகும்.

## ஆண்டாளின் கோட்பாடு

"தைந்நீராடல்" போன்ற மற்றொரு வழக்கம் அந்நாளில் தமிழ்நாட்டில் உண்டு. "காமன்" "சாமன்" என்ற இரு தெய்வங்களையும் சிற்றூர்களிலே வணங்கி வந்தார்கள். இவர்களுக்காக விழா எடுத்தார்கள்; சுவற்றிலே இவர்களுடைய சித்திரங்களை எழுதிப் பூஜை மடம் ஆண்டாள் இல்லத்திலே தயாராகிறது. எதற்காக? திருப்பாவைக்குப் பிறகு வருகிற "நாச்சியார் திருமொழி" இதை உணர்த்துகிறது. எல்லோருக்கும் புருஷனாக இருக்கிறானே அவனை அடைந்துவிட வேண்டும் என்ற வேட்கை ஆண்டாளுக்கு. எல்லோரையும் போலவே காமனை, மன்மதனை வழிபடுவதாகப் பாவனை. "மானிடர்க்கு என்று பேச்சுப் படில் வாழ்வதற்கில்லை மன்மதனே" என்பதுதான் அவளுடைய கோட்பாடு.

## உள்ளக்கிடக்கை

"திருப்பாவை", "நாச்சியார திருமொழி" இவ்விரண்டு சித்திரங்கள் மூலம் ஆண்டவனை ஆண்டாள் தேடிச்சென்றவிதம் தெரிகிறது. "திருப்பாவை"யில் நேரடியாக ஆண்டவனைக் குறித்துப் பாடியபிறகு "நாச்சியார் திருமொழி"யில் மன்மதனின் துணையை நாடுகிறாள்; மிகுந்த வேதனைப்படுகிறாள். "சிற்றில் சிதையேலே" என்று கூறுகிறார். சிலவற்றை விட்டுவிட வேண்டும் போல் இருக்கிறதே என்று எண்ணுகிறாள். இவை எல்லாம் இருந்தும் நீ வரக்கூடாதா? என்று தன் உள்ளக்கிடக்கையைக் கொட்டுகிறாள். "எனக்கு உரித்தானதை ஏற்றுக்கொண்டு விடாதே' ' என அரற்றுகிறாள். ஆனால் அவளைப் பேரின்ப வீட்டுக்கு அழைத்துச் செல்ல விரும்பியதால் சிற்றிலைச் சிதைக்கிறான் ஆண்டவன். இதன் காரணமாக அவன்பால் அன்பு அதிகரிக்கிறது. ஆண்டவனை கோபித்துக் கொண்டாலும் அதிலும் ஆண்டவன் சிந்தனை தானே தொனிக்கிறது? அதுவே நல்லது தான் என்றுஎண்ணுகிறாள். பிறகு அவன் விளையாட வருகிறாள். இதுவே "கன்னியரோடு விளையாடல்". ஞானம் முற்றாத நிலையில் அவன் விளையாட்டு புரியவில்லை. இடைஞ்சல்களாகவே அவை நினைக்கப்படுகின்றன. போய்விடுகிறான். "திரும்பவும் வருவானா?" என்று ஒரே ஏக்கம்.

## ஆண்டவனைத்தேடும்வகை

"கூடல் இழைத்தல்" என்பது அந்நாளைய வழக்கம். கோடு இழுத்துத் தொடங்கிய இடத்தில் சேர்ந்தால் "வந்து விடுவான்" என்று முடிவு கட்டி மகிழ்வார்கள். மனதில் வேதனையும், வேட்கையும், துடிப்பும் இருக்கும் போது இப்படியெல்லாம் செய்யத்தூண்டும். தாபம் அதிகரித்தலையே இது காட்

டுகிறது. வருவானோ மாட்டானோ என்ற தாபம்; ஞானிகளின் ஞானரதப் பயணத்தின் முதல்படி இது. ஏக்கம் நீங்கவில்லை. பக்கத்து மாந்தோப்பில் குயில் கூவுகிறது. "வடமதுரை மைந்தனிடம் போய்க்கூவக்கூடாதா? என்னை ஏன் கஷ்டப்படுத்துகிறாய்? என் வேங்கடவன் வரக்கூவு; இல்லையேல் அவனிடம் போய்ச் சொல்லு. என் நிலையைத் தெரிவித்து அவனை அழைத்துவா" என்கிறாள் ஆண்டாள். கண்முன் தோன்றாமல் உள்ளம் புகுந்து விட்டான். "ஆவலை உண்டாக்கித் தீயை மூட்டி விட்டு, நான் தவிக்க, உயிர்துடிக்க அவன் சிரிக்கிறானே" என்றெல்லாம் குயிலைப் பார்த்துப் பேசுகிறாள். இது அவள் ஆண்டவனைத் தேடிச் செல்லும் வகை.

## "வாரணமாயிரம்"

ஒருநாள் அவனைத் தொட்டு விட்டதான உணர்ச்சி. இதுதான் இரண்டாவது படி. முதல் படி இறைநாட்டம். இரண்டாவது படியில் ஆண்டவன் தன்னை முழுமையாகக் காட்டிவிடுகிறான். ஆகவே "வாரணமாயிரம்" பாடுகிறாள். கைத்தலம் பற்றுகிறான்; கல்யாணம் செய்து கொள்ளுகிறாள். எல்லாம் கனவு. கணநேர நினைவு. இது இடையறாத நனவாக வேண்டும் என்று ஆண்டாள் விழைகிறாள். பரம்பொருள் இன்னதெனத் தெரியாத போது உண்டான ஏக்கம் வேறு. இந்தத் தாபத்தில் நிறைய பாடல்களை வெளிப்படுத்துகிறாள். அவனுடைய காட்சிப் பழகிக்கிடப்பேனே என்ற உணர்ச்சி வெளிப்படுகிறது.

## மணி வாசகம்

"புறநின்று அழகு பேசாதே" என்று தோழியரை ஏசுகிறாள். அவன் அணிந்த வாட்ட மாலையைக் கொண்டு வரச் சொல்லுகிறாள். கேவலம் உடல் தாபத்துடன் கூடிய பெண்களைப் போல் பேசுகிறாள். வேறு எப்படிப் பேசமுடியும். பரம்பொருளைக் காணத்துடிப்பவள்? பெண் உள்ளத்தின் துடிப்பை, தாபத்தை, வேகத்தைக் காட்டுகின்றன பாடல்கள். உடலைக் கிழித்து அவனுக்கு மாலையாகப் போட்டு விடுவதாகக் கோஷிக்கிறாள் ஆத்திரத்துடன். சடங்கு இருப்பதாகப் பாவனை கொள்ளுகிறாள். "கற்பூரம் நாறுமோ, கமலப்பூ நாறுமோ?" என்று ஏமாற்றத்துடன் கேட்கிறாள். உடனே பனிச் சென்று கோபமாக மாறுகிறது. இதுதான் அனுபவ இலக்கியம். இறைநாட்டச் சொல்லில் உள்ள கனிவு வெறும் வார்த்தை அல்ல. "மாணிக்க வாசகம்". இதுதான் ஆண்டாளின் அனுபவம். "எம்குடி முழுவதும் ஆண்டாய்" என்கிறாள். ஸத்தியத்தைப் பற்றி எடுத்துரைக்கிறாள். ஞானத்தையொட்டிய கவிதை நாம் எல்லாம் அனுபவிக்கக் கிடைக்கிறது. "சிதையாரோ உன்னோடு" என்ற மொழிகள் பிறக்கின்றன. உடனே கண்ணீர் பெருகிறது. "செல்வப் பெருஞ்சங்கே" என்று வாழ்த்துகிறாள்.

## ஆண்டவனைக் கணவனாகப்பெற்றாள்

வெறி தாங்காமல் வெளி வருகிறாள். மேகத்தை தூது விடுகிறாள். இதற்கு அடுத்தபடி பார்க்கும் இடமெல்லாம் அவனாகவே தோன்றுகிறது. பிறகு யாரை யாரிடத்துத் தூது விடுகிறது? எல்லாவற்றிலும் அவன் நிறைந்திருக்கிறான். இந்நிலைமை வந்ததும் சிறுமை அகன்று விடுகிறது. "கார்க்கோடப்பூக்கள்" என்ற பத்துப் பாடல்கள் ஆண்டாளின் இப்போதைய நிலைமையை விவரிக்கின்றன.

இது வீண் பிரமையோ என்ற எண்ணம் உடனே உதிக்கிறது. "இல்லை, இல்லை" என்று கூடவே உறுதிப்பாட்டையும் காண்கிறோம். மண்ணுலகம் மறைந்து ஸத்தியமே எதிர்நிற்கிறது. பிறகு நினைத்த போதெல்லாம் அவனுடன் மண்ணுலகிலே சஞ்சரிக்கிறாள். "அவனைப் பார்த்தீர்களா?" என்று உல்லாசமாக, உவகை பூத்து வினவுகிறாள். உள்ளத்தில் இப்போது வேதனை இல்லை. மண்ணுலகமே பிருந்தாவனமாகப் படுகிறது. இக்கடைசிப் பத்துப்பாட்டுக்களில் ஸத்தியத்தைத் தொட்டுவிட்ட அனுபவம் வெளிப்படுகிறது. இப்பாடல்கள் ஸத்தியத்தை நாடிச் சென்ற உள்ளத்தின் சாயல்கள். இதன் பின்னர் பரம்பொருளைப் பெற்றாள் ஆண்டாள், கணவனாக! இதையே ஆண்டாள் திருக்கல்யாணமாக நாம் கொண்டாடி மகிழ்கிறோம்; பக்திப் பரவசத்தில் ஆழ்கிறோம்.



(தொடர் கட்டுரை)

# முமுட்சுப்படி

திரு. மாருதிதாஸன் - காஞ்சிபுரம்.

## மூலம் : 158

"உபாயாந்தரங்களில் நெஞ்சு செல்லாமைக்கும், காலக்ஷேபத்துக்கும் இனிமையாலே விடவொண்ணாமையாலும் நடக்கும்."

1) **பிரபத்தியை நிகழ்காலத்தில் சொல்லுதற்குரிய பயன்கள் யாவை?**

சேதனன் இப்பிறவியில் பிரபத்தி செய்வதற்கு முன்பு பல பிறவிகளிலும் வேறு உபாயங்களைக் கடைப்பிடித்து ஒழுகிய பழக்கமுடையவன்.

எனவே, சேதனன் தன்னை அறியாமலே வேறு உபாயங்களில் தன் மனம் செல்லாதிருப்பதற்குப் 'பற்றுகிறேன்' என்னும் சிந்தனை தவிர வேறு ஒன்றால் பொழுது போக்குதல் அரிதாகும். இதனாலும், பிரபத்தி செய்வதன் இனிமையின் மிகுதியாலும் (போக்கியதையாலும்) இப்பிரபத்தி அநுசந்தானம் (பற்றுகிறேன் என்னும் சிந்தனை) சேதனனுக்கு இடைவிடாமல் நடைபெற வேண்டிய ஒன்றாகும்.

## மூலம் : 159

"பேற்றுக்குப் பலகாலும் வேணுமென்று நினைக்கில் உபாயம் நழுவும்."

1) **பயனைப் பெறுதற்பொருட்டுப் பலமுறையும் சிந்தித்தால் வரும் குறை யாது?**

பேற்றை அடைவதற்குப் பலகாலும் பிரபத்தியைச் சிந்தித்தல் வேண்டும் என்று பிரபன்னன் கருதினால், வேறொரு துணையையும் பொறுக்கமாட்டாத சித்தோபாயம் (பகவான்) தானாகவே நழுவிவிடும்.

அனுமன் பிரமாத்திரத்தால் கட்டுண்டான். பிரமாத்திரத்தின் பெருமையையும், திண்மையையும் உணரமாட்டாத அரக்கர்கள் பிரம்மாத்திரத்தின் மீது நம்பிக்கையற்றனர். எனவே, பிரம்மாத்திரத்தின் மேல் சணல் கயிற்றைப் போட்டுக் கட்டினர். அவ்வாறு கட்டிய அளவில் பிரமாத்திரம் தானே அறுந்து வீழ்ந்தது.

அவ்வாறே சித்தோபாயமும் தானே நழுவிப்போகும். எனவேதான், பலகாலும் சிந்திக்காமல் நிகழ்காலத்தில் மட்டுமே சிந்தித்தல் தக்கது என்கிறார்.

2) **மூலம் 154 முதல் 159 வரையுள்ள கருத்துக்களைத் தொகுத்து வரைக.**

" 'ப்ரபத்யே' என்னும் வினைமுற்றுக்குப் 'பற்றுகிறேன்' என்பது பொருள். அப்பற்றுதல் மொழியாலும், மெய்யாலும் ஏற்படினும் பேற்றுக்குக் குறையில்லை. எனினும், அறிவினாலே வீடு பேறுண்டு என்பது சித்தாந்தம். ஆதலால், அதற்கேற்ப மனத்தினால் பற்றும் பற்றுதலே விரும்பத்தக்கது. எம்பெருமானே உபாயமல்லாமல் காரணங்களால் ஏற்படும் பற்றுதல்கள் உபாயப் பொருள்கள் ஆகாமையின், அதிகாரியாதற்கு மனத்தினால் பற்றுதலே போதியதாகும். மனம் தவிர மெய் மொழி ஆகிய இரு கரணங்களாலும் பற்ற வேண்டும் என்னும் நிர்பந்தமில்லை.

மெய்மொழிகளினால் பற்றினாலும் அதிகார பூர்த்தி உண்டு. வினைமுற்றில் குறிக்கப்படும் நிகழ்காலத்திற்குப் பயன்கள் சில உள. பேற்றிற்காகப் பலகாலும் சிந்தித்தால் சித்தோபாயம் நழுவிவிடும்" என்பனவாகிய செய்திகள் 154 முதல் 159 வரையுள்ள மூலங்களின் கருத்துகளாம்.

## மூலம் : 160

"உத்தர வாக்யத்தாலே ப்ராப்யம் சொல்லுகிறது."

1) **உத்தரவாக்யமாவது யாது?**

"ஸ்ரீமதே நாராயணாய நம:" என்பது உத்தரவாக்கியம்.

துவயம் இரண்டு வாக்கியங்களாக உள்ளது என்பதை முன்னர்க் குறிப்பிட்டோம். "ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே, ஸ்ரீமதே நாராயணாய நம:" என்பது துவயம். ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே" முதல் வாக்கியம். (பூர்வ வாக்கியம்) "ஸ்ரீமதே நாராயணாய நம:" இரண்டாவது வாக்கியம் (உத்தரவாக்கியம்.)

2) **உத்தரவாக்கியம் கூறுவது யாது?**

பெரியபிராட்டியாரோடு கூடியிருப்பவனாகவும், யாவருக்கும் தலைவனாகவும் இருக்கும் பெருமானின் திருவடிகளுக்குச் செய்ய வேண்டிய கைங்கர்யத்தைப் பற்றி உத்தரவாக்கியம் கூறுகிறது.

## மூலம் : 161

"ப்ராப்யாந்தரத்துக்கு அன்றென்கை"

1) **இவ்வநுசந்தானம எதற்காகச் செய்யப்படுகிறது?**

பகவத் கைங்கர்யந் தவிர வேறொரு பலனுக்காக அன்று இவ்வநுசந்தானம். புதிய செல்வம், இழந்த பழைய செல்வம், ஆன்மாநுபவம், கைங்கரியம் ஆகிய இந்த நான்கனுள் எதையேனும் ஒன்றை விரும்பி, பிராட்டியாரோடுங்கூடிய இறைவனுடைய திருவடிகளைப் பற்றலாம்.

ஆனால், இம்மந்திரத்தின் பின்வாக்கியம் மேற்கூறிய பயன்களுள் முதல் மூன்றையும் நீக்கி, நான்காவதாகிய கைங்கரியப் பலனைப் பெறுதற் பொருட்டே எம்பெருமானைப் பற்றுவது! இதுவே சேதனன் பெறும் பலனுமாம்.

## மூலம் : 162

"உபாயாந்தரங்களை விட்டு சரமோபாயத்தைப் பற்றினாப் போலே, உபேயாந்தரமான ஐச்வர்ய கைவல்யங்களை விட்டு எல்லையான ப்ராப்யத்தை அர்த்திக்கிறது."

1) **மற்ற பலன்களை விட்டு விட்டு பகவத் கைங்கர்யமாகிற பலனை மட்டும் விரும்புவது ஏன்?**

பெருமானாரைத் தவிர வேறு உபாயத்தைச் சேதனன் பற்றுவதில்லை. கன்ம, ஞான, பக்திகளை விட்டுத் தன் சொரூபத்துக்கு ஏற்பப் பெருமானையே உபாயமாகப் பற்றுகிறான்.

அதுபோல, பெருமானைத் தவிர வேறு போக்கியப்பொருள் அற்றிருக்கும் சேதனன் தன் சொரூபத்துக்கு ஏற்ப ஐச்வர்ய கைவல்யங்களை விட்டு விட்டுப் பெருமான் திருடிகளில் புரியும் கைங்கரியத்தையே விரும்புவது பொருத்தமாகும்.

## மூலம் : 163

"இவன் அர்த்திக்க வேணுமோ? ஸர்வஜ்ஞன் இவன் நினைவறியானோ? என்னில்,"

## மூலம் : 164

"இவன் பாசுரம் கேட்டவாறே திருவுள்ள முகக்கும்."

1) **சேதனன் பெருமானிடம் கைங்கரியத்தைப் பிரார்த்தித்துத்தான் பெறவேண்டுமா? ஏன்?**

ஆம்! பிரார்த்தித்துத்தான் பெறவேண்டும்.

கைங்கரியத்தைப் புரியவேண்டும் என்று விரும்பும் சேதனனுடைய எண்ணத்தைப் பேரறிவாளனான பெருமான் அறியமாட்டானா? என்னில், அறிவான் என்றாலும் சேதனன் பெருமானிடம் சென்று, "என்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு உற்றோமே யாவோம்! உனக்கேநாம் ஆட்செய்வோம்" என்று பிரார்த்தித்தால், இவன் பிரார்த்தனையைச் செவி ஏற்றவுடனே பெருமான் மகிழ்ச்சியடைகிறான்.

பெருமான் மகிழ்ச்சி அடைய வேண்டும் என்பதற்காகவே சேதனன் பெருமானைப் பிரார்த்திக்க வேண்டியுள்ளது.

நோயால் வருந்தும் குழந்தை உணவில் விருப்பின்றிக் கிடக்கும். நோய் நீங்கியவுடன் பசி ஏற்பட்டு "அம்மா! எனக்கு உணவு வேண்டும்!" என்று கேட்டால் அவ்வார்த்தையைக் கேட்டுத் தாய் ஆனந்தப்படுவாள்.

அதுபோலவே சேதனன் பிரார்த்தனையைக் கேட்டு ஆண்டவன் ஆனந்திப்பான்.

## மூலம் : 165

"ஸ்ரீமதே பெரிய பிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு,"

1) **ஸ்ரீமதே என்பதன் பொருள் யாது?**

ஸ்ரீமதே என்பதற்குப் பெரிய பிராட்டியாரோடு கூடியிருந்துள்ளவனுக்கு என்பது பொருளாம்.

## மூலம் : 166

"அவன் உபாயமாமிடத்தில் தான் புருஷகாரமாயிருக்கும்; அவன் ப்ராப்யனாமிடத்தில் தான் ப்ராப்யையுமாய், கைங்கர்யவர்த்தகையுமாயிருக்கும்."

1) **பிராட்டியாரின் புருஷகாரநிலை, உபேயநிலை ஆகியவற்றை விளக்குக.**

பெருமான் சேதனனுக்குள்ள துன்பங்களைப்போக்கி இன்பங்களை அருளுவதற்கு உபாயமாய் நிற்குமிடத்தில், பிராட்டியார் புருஷகாரமாய் நிற்பர். இது புருஷகாரநிலை.

சேதனன் செய்யும் கைங்கர்யத்தைப் பெருமான் ஏற்றுக்கொண்டு மகிழ்ந்து அடையத்தக்க பொருளாகத் தான் இருக்கிறான். அப்போது பிராட்டியாரும் எம்பெருமானைப் போன்றே மகிழ்ச்சியடைந்து அடையத்தக்க பொருளாகவும், சேதனன் செய்யும் கைங்கர்யத்தை ஒன்று பத்தாகப் பெருமாள் திருவுள்ளத்தில் படுமாறு செய்து அக்கைங்கர்யத்தை மேலும் மேலும் வளர்ப்பவராகவும் பிராட்டியார் இருப்பார். இது உபேய நிலை.

## மூலம் : 167

"இதிலே திருமந்திரத்தில் சொன்ன ப்ராப்யத்தை விசதமாக அநுஸந்திக்கிறது."

1) **'நாராயணாய' என்னும் பதப்பொருளைத் தெளிவாக விளக்குக.**

திருமந்திரத்தில் கூறிய 'நாராயணாய' என்னும் பதம் "நாராயணனுக்கே அடிமை செய்யப் பெறுவேனாக" என்று பொருள் தருகிறது.

ஆனால், துவயத்தில் கூறிய 'நாராயணாய' என்னும் பதம் இப் பொருளை விளக்கமாகக் கூறு கிறது.

துவயத்தில் கூறியுள்ள 'நாரா யணாய' என்னும் பதம் சேத னன் செய்யும் அவ்வடிமை யைப் பெற்றுக்கொள்ளுகிறவர் கள் பிராட்டியாரும் பெருமானு மாகச் சேர்ந்துள்ளார்கள் என் றும், அடிமை செய்பவன் மம காரத்தை ஒழித்தவனாக இருத் தல் வேண்டும் என்று சொல் லுகிறது.

எனவே, திருமந்திரத்திலுள்ள 'நாராயணாய' பதத்திற்கு, இத்து வயத்தின் 'நாராயணாய' என் னும் பதம் விளக்கமாக அமைந் துள்ளது என்பதை அறியலாம்.

## மூலம் : 168

"இளைய பெருமானைப் போலே இருவருமான சேர்த்தி யிலே அடிமை செய்கை முறை."

1) பெருமானும் பிராட்டியும் சேர்ந்தி-ருக்கும் நிலையிலேயே ஸங்கல்பம் செய்ய வேண்டும் என்னும் நிர்ப்-பந்தம் ஏன்?

பெருமானும் பிராட்டியும் சேர்ந்திருக்கும் சேர்த்தியில் அடி மைத்தொழில் புரிந்தார் இலக் குமணன்! அதுபோல, இருவர் சேர்த்தியில் தொண்டு செய் தலே சேதனனுடைய ஆன்ம சொரூபத்திற்கு ஏற்றதாம்.

இராமபிரானும், சீதாபிராட்டி யும் கானகம் சென்றபோது, அவர்களைப் பின்தொடர்ந்து சென்ற இலக்குமணன் செய்த தொண்டுகள் இத்தம்பதியருக்கு இனிமையை அளித்தது என்று இதிகாசத்தில் சொல்லப்பட்டுள் ளது.

எனவே இவ்விருவருக்கும் அடி மைப்பட்டிருத்தலே சேதனனுக் குச் சொருபமாம்.

## மூலம் : 169

"அடிமைதான் ஸித்திப்பதும் ரஸிப்பதும் அச்சேர்த்தியிலே"

1) சேர்த்தியிலே அடிமை செய்வதில் உள்ள சிறப்பு யாது?

சேதனனுடைய தொண்டுக ளைப் பெருமான் தன் சுதந் தரத்தன்மையினால் அசட்டை செய்யாது ஏற்றுக்கொள்ளுமாறு செய்பவர் பிராட்டியாரே!

எனவே, சேதனன் செய்யும் தொண்டு கைகூடுவதும், இனி மையைத் தருவதும் பெருமா னும் பிராட்டியும் சேர்ந்திருக்கும் சேர்த்தியிலேயே என்பது தெளி வாம்.

## மூலம் : 170

"நாராயணாய - ஸர்வ சேஷி யாயுள்ளவனுக்கு."

1) நாராயணாய - என்பதன் பொருள் யாது?

எல்லாப் பொருள்களுக்கும் தலைவனாயிருப்பவன் என்பது பொருள்.

## மூலம் : 171

"இதிலே திருமேனியையும் குணங்களையும் சொல்லும்."

1) கைங்கர்யம் எனப்படுவது யாது?

பெருமானின் திருமேனி, குணங்கள் முதலியவற்றை அனு பவிப்பதனால் உண்டாகும் அன்பினால் செய்யப்படுவது கைங்கர்யம் எனப்படும்.

2) கைங்கர்யத்துக்கு முன் ஏற்படும் அனுபவத்திற்கு இலக்காயுள்ளவை யாவை?

பெருமானின் திவ்ய மங்கள விக்கிரகமும் (திருமேனியும்) கலி யாண குணங்களும் கைங்கர் யத்திற்கு முன் ஏற்படும் அனு பவத்திற்கு இலக்காயுள்ளது.

## மூலம் : 172

"சேஷித்வத்திலே நோக்கு."

1) நாராயண என்னும் பதத்துக்கு நோக்கு யாது?

பெருமானின் எல்லாக் குணங் களும் அனுபவிக்கத்தக்கவையே! ஆயினும், இவ்விடத்தில் நாரா யண என்னும் பதத்திற் குச் சேஷித்துவம் (தலைமைப் பண்பு) என்கிற குணத்திலேயே முக்கியமான நோக்கு என்று கொள்ள வேண்டும். ஏனெ னில், இங்குச் சொல்லப்படுகிற கைங்கர்யத்துக்கு மிகவும் அந்த ரங்கமாயிருப்பது சேஷித்துவம் என்பதாலேயாம்!

## மூலம் : 173

"ப்ராப்த விஷயத்தில் கைங் கர்யமிறே ரஸிப்பது?"

1) நாராயண பதத்துக்கு நோக்கு சேஷித்துவத்திலே என்று சொல்-லுவதற்குப் பயன் யாது?

சேதனன் செய்ய வேண் டியவை என்று வகுத்துக்கூ றிய விஷயத்தில் பகவானுக்குச் செய்யும் தொண்டு ஒன்றே சேத னனுக்கு இன்பம் தருவதாகும்.

## மூலம் : 174

"இந்த சதுர்த்தி, கைங்கர் யத்தை ப்ரகாசிப்பிக்கிறது."

1) நாராயணாய என்பதில் உள்ள நான்-காம் வேற்றுமைக்குப் பொருள் யாது?

'நாராயணாய' என்னும் பதத் தில் உள்ள 'ஆய' என்னும் நான் காம் வேற்றுமைக்குக் (சதுர்த் திக்கு) கைங்கர்யத்தை ஒளிரச் செய்தல் என்பது பொருளாகும். எனினும், கைங்கர்யத்தை ஒளி ரச்செய்தல் என்பதனைக் கைங் கர்யப் பிரார்த்தனை ஒளிரச் செய்தல் என்று விரித்துப் பொருள் கொள்ள வேண்டும்.

## மூலம் : 175

"கைங்கர்யந்தான் நித்யம்."

1) பகவானுக்குத் தொண்டு செய்வது என்பது ஏதேனும் ஒரு காலத்துக்கு மட்டுமே உரியதா?

அன்று. பகவத் கைங்கர்யம் ஆன்மாவிற்கு என்றும் நிலையாயுள்ள ஒன்று. ஒரு கால் தோன்றி ஒருகால் மறைவதன்று.

ஏனெனில், அடிமை செய்தலே ஆன்மாவின் சொரூபம் என்பதை முன்னர் அறிந்தோம். மேலும் தொண்டு செய்யாத போது அடிமைத் தன்மை (சேஷத்வம்) ஆன்மாவிற்குக் கைகூடாது. எனவே, தொண்டு செய்தல் என்பது ஆன்மாவிற்கு என்றும் உள்ளதென்றே கொள்ள வேண்டும்.

## மூலம் : 176

"நித்யமாக ப்ரார்த்தித்தே பெற வேணும்."

1) தொண்டு செய்தல் என்றும் உள்ள பொருள் என்று முன்பு கூறப்பட்டுள்ளது. அப்படியிருக்க, இதைப் பிரார்த்தித்தே பெற வேண்டும் என்பானேன்?

நாம் செய்யும் கைங்கரியத்தை ஏற்றுக்கொள்ளுகிற பெருமான் யாவரினும் மேலானவன். கைங்கரியம் செய்யும் நாமோ அவன் ஆணைக்குக் கட்டுப்பட்டவர்கள். எனவே, நாம் செய்யும் கைங்கர்யம் கைகூட வேண்டுமானால், பெருமானைப் பிரார்த்தித்தே பலனைப் பெற வேண்டியுள்ளது. அப்படிச் செய்தால்தான், கைங்கர்யப் பிரார்த்தனை சித்திக்கும்.

## மூலம் : 177

"சேஷிக்கு அதிசயத்தை விளைக்கை சேஷபூதனுக்கு ஸ்வரூப லாபமும், ப்ராப்யமும்."

1) பகவத் கைங்கர்யத்தை விரும்பியே பெற வேண்டும் என்பது ஏன்?

கைங்கர்யத்தின் அடிப்படையில் பெருமானுக்கு வியப்பை உண்டாக்குதல் என்பது சேதனனுக்குச் சொரூப லாபமாக அமைகிறது. மேலும், பெருமானுடைய முகமலர்ச்சிக்கு ஏதுவாகவும் கைங்கர்யம் அமைவதால், அக்கைங்கர்யம் பிராப்பியமாகவும் (அடையத்தக்க பொருளாகவும்) அமைகிறது.

இவ்வாறு சொரூப லாபமாகவும், பிராப்பியமாகவும் கைங்கர்யம் அமைவதால், இதனை விரும்பியே பெற வேண்டும்.

2) மூலம் 170 முதல் 177 வரை கூறப்பட்டுள்ள கருத்துக்களைத் தொகுத்து வரைக.

நாராயணாய என்பதற்கு எல்லாப் பொருள்களுக்கும் தலைவனாக உள்ளவன் என்பது பொருள். இப்பதம் எம்பெருமானுடைய திவ்ய மங்கள விக்கிரகத்தையும், குணங்களையும் சொல்லுகிறது. இப்பதத்திற்குச் சேஷித்துவத்திலேயே நோக்கு. இங்ஙனம் சேஷித்துவத்தைச் சொல்லுதற்குப் பயன் சேதனனுக்கு இன்பம் தரும் என்பது. இதில் உள்ள சதுர்த்தி கைங்கர்யத்தை ஒளிரச் செய்கிறது. ஆன்மாவிற்கு என்றும் உள்ள செயலே பகவத் கைங்கர்யம் செய்தல். இக்கைங்கர்யத்தைச் சேதனன் பிரார்த்தித்தே பகவானிடமிருந்து பெறவேண்டும். பெருமானுக்கு வியப்பை உண்டாக்குவதே சேஷபூதனுக்குச் சொரூப லாபமும், பயனும் ஆகும்" என்பது முதலான கருத்துகள் மூலம் 170 முதல் 171 வரையுள்ளவற்றில் கூறப்பட்டுள்ளன.

## மூலம் : 178

"நம: - கைங்கர்யத்தில் களையறுக்கிறது."

1) நம: என்பதன் பொருள் யாது?

ஸ்ரீமதே நாராயணாய நம: என்பதில் உள்ள இறுதிப்பதம் நம: என்பது. கைங்கர்யத்திற்குப் பகைகளாக உள்ளவைகளை இந்த நமப்பதம் போக்குகிறது.

எனவே கைங்கர்யத்தில் உண்டாகும் குற்றங்களை ஒழித்தலையே இந்த நமப்பதம் கூறுகிறது என்பதே பொருத்தமான பொருளாகும்.

## மூலம் : 179

"களையாவது - தனக்கென்னப் பண்ணுமது."

1) கைங்கர்யத்துக்குக் களையாவது யாது?

தன் இன்பத்துக்கென்று சேதனன் செய்யும் கைங்கர்யமே களையாகும். "நாம் அனுபவிப்பவர் (நாம்போக்தா), இது நம்முடைய அநுபவம்" என நினைத்துக்கைங்கர்யம் செய்தால், அந்த நினைப்பே கைங்கர்யத்துக்குக் குற்றமாகும்.

## மூலம் : 180

"இதிலே அவித்யாதிகளுங் கழியுண்ணும் ."

1) கைங்கர்யத்துக்கு மேலும் பகைகளாய் உள்ளவை எவை?

அகங்கார, மமகாரங்கள் ஒழிய வேண்டும் என்று பிரார்த்திப்பது இந்த நமப்பதம். மேலும், தேகத்தையே ஆன்மா என நினைக்கும் அஞ்ஞானமும், அதனடியாய் உண்டாகும் கன்மங்களும், அவற்றால் ஏற்படும் தேகத் தொடர்பும் கைங்கர்யப் பகைகளாம்.

இந்நமப் பதத்தால் இப்பகைகளும் நீங்கும்.

## மூலம் : 181

" 'உனக்கே நாம் ஆட் செய்வோம்' என்னும்படியே ஆக வேணும்."

1) *பகவத் கைங்கர்யம் பண்ணும் போது எந்த நிலையோடு இருத்தல் வேண்டும்.*

"உனக்கே நாம் ஆட்செய்வோம்" என்னும் ஆண்டாள் பாசுரத்தின் படியே பகவத் கைங்கர்யம் பண்ணப் பெறுதல் வேண்டும்.

சேதனன் பெருமானுக்குத் தொண்டு செய்யுங்கால் "இத்தொண்டு பெருமானுக்கே உகப்பை அளிக்க வேண்டும்" என்னும் எண்ணத்துடன் செய்வதே சிறந்ததாகும். இதுவே சேதனன் சொரூபத்துக்கு ஏற்றதாகும்.

## மூலம் : 182

"ஸௌந்தர்யம் அந்தராயம்; கீழ்சொன்ன கைங்கர்யமும் அப்படியே,"

1) *இக்கைங்கர்யத்துக்கு ஏற்படும் இடையூறுகள் யாவை?*

இறைவனுடைய திருமேனியின் அழகு இவன் மனத்தைக் கவர்ந்து, கைங்கர்யத்தை மறக்குமாறு செய்கிறது. எனவே, பெருமானின் வடிவழகில் ஈடுபடுவதும் கைங்கரியத்துக்குத் தடையாகிறது.

அதுபோலவே, 'ஆய' என்னும் வேற்றுமையில் கூறிய கைங்கர்யமும் பெருமானின் முகமலர்ச்சிக்குறுப்பாகப் புரியும் கைங்கர்யத்துக்குத் தடையாகிவிடும்.

## மூலம் : 183

"கைங்கர்ய ப்ரார்த்தனை போலே இப்பதத்தில் ப்ரார்த்தனையும் என்றுமுண்டு."

1) *இடைவிடாமல் பிரார்த்தனை ஏன் செய்ய வேண்டும்? .*

கைங்கர்யப் பிரார்த்தனை எப்போதும் செய்து கொண்டிருக்க வேண்டும் என்பது போலவே, கைங்கர்ய விரோதிகளைப் போக்க வேண்டும் என்னும் பிரார்த்தனையும் இவ்வுலகிலன்றிப் பரமபதம் சென்றாலும் அங்கும் நடைபெறவேண்டும்.

பகவானின் முகவுல்லாசத்தின் பொருட்டுச் செய்யும் கைங்கர்யத்திற்குத் தடைகளாக உள்ளவைகளை நீக்குவதற்கு இடைவிடாது பிரார்த்தனை செய்தல் வேண்டும்.

## மூலம் : 184

"மருந்தே நங்கள் போக மகிழ்ச்சிக்கு என்னா நின்ற திறே."

1) *உலகியல் சம்பந்தமற்ற பரமபதத்திலும், "நான் அனுபவிப்பவன்" என்னும் எண்ணம் உண்டாகுமா?*

உண்டாகும்! பரமபதம் சென்றிருக்கும் காலத்திலும் பிரார்த்தனை தேவையே.

நித்திய சூரிகளுக்கும் பெருமானின் சௌந்தர்யப்பெருக்கால் கைங்கர்யத்துக்குத் தடைகள் வராமல் இருப்பதற்கு இந்தப் பிரார்த்தனை இடைவிடாது நடைபெற்றேயாக வேண்டும்.

"பெருமானே! நாங்கள் உன்னை அனுபவிக்கும்போது, எங்களுக்கு ஆனந்தம் உண்டாகிறது. 'அந்த ஆனந்தத்தை அனுபவிப்பவர்கள் நாங்கள்' என்னும் எண்ணமும் உண்டாகிறது. இதனால் எங்கள் சொரூபம் அழியாதவாறு எங்களைக் காக்கும் மருந்தானவனே!" என்று பரமபதத்திலும் நித்திய சூரிகள் பேசுவதாகவும் ஆழ்வார் அருளிச்செய்துள்ளார்.

2) *மூலம் 178 முதல் 184 வரை கூறியுள்ள கருத்துக்களைத் தொகுத்து வரைக.*

நமப்பதம் கைங்கர்யத்தினுள்ள குற்றங்களைப் போக்குகிறது. கைங்கர்யம் தன் இன்பத்திற்காகவே செய்யப்படுகிறது என்று எண்ணுவதே சேதனன் செய்யும் குற்றமாம். இக்கைங்கர்யத்துக்குப் பெருமானுடைய அழகும், தன்னலத்தைக் கருதிச் செய்யும் கைங்கர்யமும் தடையை உண்டாக்கக் கூடும். அதற்கு, இடந்தராமல் கைங்கர்யத்துக்காகப் பிரார்த்தனை செய்வது போலவே, கைங்கர்யத்தடைகளைப் போக்கவும் பிரார்த்தனை செய்தல் வேண்டும். இப்பிரார்த்தனையும் என்றும் தடைபடாமல் நடைபெறவேண்டும். இதற்கு ஆழ்வாருடைய 'மருந்தே நங்கள்' என்னும் பாசுரமே தக்க சான்றும்" என்னும் கருத்துக்கள் மூலம் 178 முதல் 184 வரை கூறப்பட்டுள்ளன.

3) *த்துவயத்தில் கூறப்பட்டுள்ள கருத்துக்களைத் தொகுத்துத் தருக.*

புருஷகாரம், பிராட்டியாரின் நித்தியமான சேர்க்கை, அச்சேர்க்கையினால் மிளிரும் பகவானுடைய வாத்சல்யம் முதலான குணங்கள், அக்குணங்களை ஒளிரச்செய்யும் திவ்விய மங்கள விக்கிரகம், இவற்றையுடைய பெருமானது உபாயத்தன்மை, இதனுடைய ஸ்வீகாரம், இதன் பயனான கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளும் பொருள், அப்பொருளினுடைய சர்வ சேஷத்வம், அதனுடைய சிறப்பு, கைங்கர்யத்திற்குப் பகையாயுள்ளவற்றின் நீக்கம் ஆகியவை துவயத்தில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

**துவயத்தின் பொருள்**
முற்றுப் பெற்றது.

(தொடரும்)

★ ★ ★

# ஐம்புலனடக்கும் சபரி விரதம்

"சன்மிஷ்டை"

**கார்த்திகை மாதம்**

அங்கும் இங்குமாக காலையிலும் மாலையிலும் "சாமியே சரணம் ஐயப்பா" என்ற கோஷம் வானைப் பிளக்க ஆரம்பித்துவிட்டது. ஐம்பது நாட்களுக்குக் குறையாத இந்த விரதம் நம் நாட்டில் கைக்கொள்ளும் அனைத்து விரதங்களிலும் மேம்பட்டது என்று சொன்னால் அது மிகையாகாது. எல்லா விரதங்களும் பட்டினியிருக்கவும் , கண் விழிக்கவும், மற்றும் தெய்வ ஆராதனை செய்யவுந்தான் வற்புறுத்துகின்றன.

ஐம்புலனை அடக்கினால்தான் ஆண்டவன் தரிசனம் கிடைக்கும் என்று வற்புறுத்தும் ஒரே விரதம் "சபரி விரதம்" எனலாம். வேதங்களின் சாரமும், கீதையின் சாரமும், யோகிகளின் உபதேசமும் மற்றும், நம் புராண இதிகாசங்களும் வற்புறுத்துவது ஐம்புலன் அடக்கமே! "கந்துக மதக் கரியை வசமாய் நடத்தலாம்" என்று தொடங்கும் தாயுமானவர் பாடலின் முடிவில் "சிந்தையை அடக்கியே சும்மாயிருக்கின்ற திறம் அரிது" என்று கூறும் அருள் வாக்கு அனைவரும் அறிந்ததே! ஆனால், இந்த விரதத்தில் சிந்தையை அடக்குவதற்கு முயல்வதுதான் முக்கியக் குறிக்கோள்.

"தீயவற்றைப் பேசாதே - தீயவற்றைப் பார்க்காதே - தீயவற்றைக் கேட்காதே - தீயவற்றை நினைக்காதே - தீயவற்றைச் செய்யாதே!" என்பதையே சதா நினைவில் கொண்டு இயன்ற வரையில் செயலில் காட்டுவதே இந்த விரதத்தின் மகிமை.

**பிரம்மச்சர்யம்**

ஆண்-பெண் சேர்க்கையைத் தவிர்ப்பதுவே பிரமம்மச்சர்யம் என்று பொதுவாக யாவரும் அறிவர். பெரும்பாலோர் கருதுவது ஆண்-பெண் உடல்சேர்க்கையில்லாதிருந்தால் அதுவே பிரம்மச்சரியம் என்று. ஆனால் மனத்தாலும் பெண்ணைத் தீண்டாதிருப்பதுதான் இந்த விரதத்தில் அநுஷ்டிக்க வேண்டிய பிரம்மச்சரியம். பார்க்கும் பெண்கள் அனைவரையும் அம்பிகையின் அவதாரமாகக் கருதுவது - கணவனும் மனைவியும் இராமகிருஷ்ண பரமஹம்சரும் சாரதாமணிதேவியாரும் போல இருந்து வருவது இந்த விரதத்தில் காணும் உயர்ந்த தத்துவம்.



**பிராயச் சித்தம்**

இந்து மதத்தில் எந்த ஒரு நல்ல காரியம் செய்தாலும் அதில் ஒருசில விதிவிலக்குகளும், பிராயச்சித்தங்களும் உண்டு. இந்த விரதத்தில் வீட்டுக்கு விலக்கான ஸ்திரிகளைப் பார்ப்பது கூடாது என்பது முக்கியமான நிபந்தனைகளில் ஒன்று. "ஆண்களோடு பெண்களும் சரிநிகர்

சமானமாக வாழுமிந்த நாட்டிலே" என்ற இந்த நாட்களில் இது எப்படி சாத்தியமாகும். ஆகவே, இதற்கு ஒரு பிராயசித்தம் விரத காலத்தில் பிரதி தினமும் சாயங்காலம் ஸ்நாநம் செய்யும்பொழுது, பசுஞ்சாணத்தில் ஒரு பாக்கு அளவு நீரில் கரைத்து ஸ்நானம் செய்துவிட வேண்டும் என்பதாகும். (இதை ஒரு சில ஐயப்பன்கள் நகர்ப்புறத்தில் செய்வதில்லை என்பது உள்ளங்கை நெல்லிக்கனியாகும்; இனியாவது ஒழுங்காகச் செய்வார்களாக.)

## ஸ்நானம்

காலை மாலை இருவேளையும் தவறாது குளிர்ந்த நீரில் ஸ்நானம் செய்துதான் வழிபடவேண்டும். மழையோ, பனியோ, கடுங்குளிரோ, தொடர்ந்து 45 முதல் 50 நாள் வரை ஸ்நானம் செய்வதன் மூலம் விரதத்தின் முடிவாக சபரி மலை யாத்திரையில் அடர்ந்த காடுகளில், மலைப்பிரதேசத்தில் மழையிலும், பனியிலும், மலை நீரிலும் குளிக்க - குடிக்க - படுக்க நேரிடும் பொழுது உடல்நிலை பாதிக்கப்படாமல் இருக்க இப்பழக்கம் ஒரு சாதனையாக இருக்கிறது.

## வழிபாடு

தமிழ்மொழியில் ஸ்ரீ ஐயப்பன் நாமங்களைச் சரணம் சொல்லுதல் என்ற முறையில் - முடிந்தவரை அதாவது அன்றுடம் கிடைக்கும் அவகாசத்தை சந்தர்ப்பத்தைப்பொறுத்துக் கூட்டியோ அல்லது குறைத்தோ சொல்லி சிறிதளவு பானகம் கரைத்து நிவேதனம் செய்து கற்பூரம் கொளுத்தி, வந்தனை வழிபாடு செய்வது போதுமானது.

மற்றெந்த நிவேதனமும் அவசியமில்லை; வசதியும் வாய்ப்பும் உள்ளவர்கள் அவரவர் இஷ்டம் போல் வகை வகையான பிரசாதங்கள் படைப்பதும் தவறில்லை. பலவிதமான பழங்களைப் படைப்பதும் சிறந்தவைகளாகக் கருதப்படுகிறது.

## உடைகள்

கறுப்பு, நீலம், காவி போன்ற கலர் துணிகளை அணிந்து கொள்வது வற்புறுத்தப்படுகிறது. அநேகருக்கு இதில் ஒரு பிரச்சினை. கலர் ஆடை ஏன் உடுத்திக்கொள்ள வேண்டும். வெள்ளை வஸ்திரம் உடுத்திக்கொண்டால் ஆகாதா? என்பர். ஆகாது என்பதில்லை; தத்துவார்த்தமாகச் சொல்லப்போனால் நாம் எல்லோரும் மாயையில் சிக்கித் தவிப்பவர்களே.

மாயையைக் கறுப்பு நிறத்திற்கு ஈடு சொல்வர் பெரியோர். நாம் கறுப்பு வஸ்திரம் உடுத்துவதற்கு, "ஐயப்பா! நான் மாயையில் உழன்று தவிக்கிறேன்; உன் சந்நிதி வருகிறேன். என்னை மாயையில் இருந்து விடுபடச் செய்" என்று பொருள். இதை அனுசரித்தே அநேகர் யாத்திரையில் "பம்பாநதி"யில் ஸ்நானம் செய்தபின் கையுடன் எடுத்துச் சென்றுள்ள புதிய வஸ்திரம் உடுத்திக்கொள்வார்கள். (பம்பாநதி ஸ்நானக்கட்டம் - ஐயப்பன் ஆலயத்திலிருந்து சுமார் ஆறுமைல் தொலைவில் அமைந்துள்ளது.) ஸ்ரீராம பிரான் ஜடாயுவுக்கு சிரார்த்தம் செய்த ஸ்நானக் கட்டம் தான் அந்த இடம். ஊன்றிப் பார்ப்போமானால், மற்ற மனிதர்களிடமிருந்து பிரித்துக் காட்டவும், ஐயப்பனுக்கு உரிய மரியாதை கிடைக்கவும், தன்னைத்தானே உணர்ந்து சதா சர்வகாலமும் ஸ்ரீ ஐயப்பனை நினைவு படுத்திக்கொண்டிருக்கவும், கொலை, களவு, பொய், ஹிம்சை போன்ற எந்தத்தீமையும் எண்ணத்தில் கூடச் செய்யப்படாதிருக்கவும் அறிவுறுத்தும் வகையில் வண்ண ஆடை அவசியமாகிறது என்பது மறுக்கமுடியாத உண்மையாகும்.

## ஆச்சார நியமம்

விரத காலத்தில் நண்பகல் உணவும், இரவு பலகாரமும் செய்வது முறை. வீட்டுவசதி உள்ளவர்கள் கூடுமான வரையில் ஹோட்டல் உணவைத் தவிர்க்க வேண்டும். ஆனால், "ரூம்" குடியிருப்பில் இருந்து கொண்டு ஹோட்டல் சாப்பாட்டையே நம்பி வாழ்பவர்கள் ஹோட்டல் சாப்பாட்டை சாப்பிட வேண்டும். அதாவது வீட்டு வசதி உள்ளவர்கள் ஹோட்டலைத்தேடியும், ஹோட்டலில் சாப்பிடுபவர்கள் வீட்டுச் சாப்பாட்டைத் தேடியும் வருவது அவசியமில்லை; வேண்டியதுமில்லை என்பது அனுபவ சாத்தியமான விதி முறை. எப்படியிருந்தாலும், மாமிசமும், பழையமுது கண்டிப்பாகத் தவிர்க்கப்பட வேண்டியது அவசியம்.

## படுக்கை

நித்திய வாழ்க்கையில் உபயோகித்த பாய், தலையணை, போர்வை எதுவுமே விரத காலத்திற்கு உகந்தது அல்ல. சபரி யாத்திரையில் கரடு முரடான காட்டுப்பிரதேசத்தில் படுத்துறங்க வேண்டிய இந்த விரதத்தை அதற்கு ஏற்ப முன் கூட்டியே சாதகமாகப் பெஞ்சுகளில், பாய் தலையணைகளை நீக்கிப் படுத்திருக்கப் பழகுவதே சாலச்சிறந்தது.

புதிய போர்வையை உபயோகிக்க வேண்டும். பொதுவாக படுக்கை, உடை, உணவு, ஸ்நானம், சிந்தனை அனைத்திலும் ஒரு புரட்சியை ஏற்படுத்தி எப்படியும் வாழமுடியும் என்ற நிலைக்கு மாற்ற இந்த விரதம் ஒரு பெரிய சாதனை ஆகும்.

### விரதத்துக்கு உரியவர்

இந்த விரதத்துக்கு ஆண்கள் அனைவருமே தகுதி உடையவர்கள். பெண்பாலரில் "வீட்டு விலக்கு" நின்று போனவர்கள் மட்டுமே தகுதியுடையவர்கள். மேலும், அந்த நிலையிலுள்ள பெண்டிரே உணர்ச்சி வசப்பட மாட்டாத நிலையில் உள்ளவர்கள் என்பது உண்மை. வீட்டுக்கு விலக்கு உடையவர்களைப் பார்ப்பதே விரத காலத்தில் தகாது என்ற நியதியில் அதையே உடன் பெற்றவர்கள் விரதம் ஏற்பது எப்படி சாத்தியமாகும் என்பதும் கவனிக்கத் தக்கது.

கடந்த சில வருஷங்களாக இளம் வயதுடைய பெண்களும், இந்த விதியை மீறி மலைக்கு வர ஆரம்பித்து விட்டார்கள். இது மிகவும் நியாயமற்றது. யாத்திரையில் இந்த மாதிரி பெண்களைக் காண நேர்ந்த இதர ஐயப்பன்மார்கள் மனம் மிகவும் புண்படுகிறது. இந்த நிலை அடியோடு மாற குருசாமிமார்கள் தான் கடும் முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும். அத்தகைய பெண்களுடைய கணவன்மார்களும் இதில் சிறிது கண்டிப்பாக இருக்கவேண்டும்.

### பேதா பேதம்

நம் இந்து மதத்தில் எல்லா நல்ல நியமங்களும் சொல்லி வரும் நிலையில் இந்த சபரி விரதத்திலோ ஜாதி, மதம்; சிறியவர் பெரியவர்; உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பேதா பேதமின்றி வேதசாரமாகிய அபேத நிலையை அனுசரிப்பது மிகவும் சிறப்பானதொன்று.

மேலும் யான் என்ற அகங்கார புத்தியும், எல்லாம் எனக்கே - என்னுடையதே என்ற சுயநலக்காரியங்களையும் சிறிதளவும் காணமுடியாத உயர்ந்த விரதம் இந்த சபரி விரதமே என்று துணிந்து கூறலாம். ♣

---

## தீர்த்த யாத்திரை

கோராகும்பர் என்ற மகான் ஒருவர் இருந்தார். அவரிடம் சிலர் அணுகி "நாங்கள் தீர்த்த யாத்திரை செல்வதாக இருக்கிறோம் தாங்களும் எங்களுடன் வாருங்கள்" என்றழைத்தனர்.

கோரா கும்பர் அந்த அன்பர்களிடம் ஒரு பாகற்காயைக் கொடுத்து "நீங்கள் மூழ்கும் புனிதத்தீர்த்தங்கள் எல்லாவற்றிலும் இந்தப்பாகற்காயை முக்கி எடுத்து வாருங்கள் அதை எனக்குக் கொடுங்கள் போதும்" என்று சொல்லி அனுப்பினார். அன்பர்கள் யாத்திரை முடிந்து திரும்பி வந்து கோராவிடம் பாகற்காயைத் தந்து "தாங்கள் கூறியபடியே இந்தப் பாகற்காயைப் பலபுனித தீர்த்தங்களில் முக்கி எடுத்துக்கொண்டு வந்திருக்கோம்" என்றனர்.

கோரா அந்தப் பாகற்காயை நறுக்கிச் சிறு சிறு துண்டுகளாக்கினார். அவற்றை அந்த அன்பர்களிடம் கொடுத்து உட்கொள்ளும்படி கூறினார்.

வந்தவர்கள் அந்தப் பாகற்காயை வாயிலிட்டுப் பாகற்காயின் கசப்பைச் சகிக்கமுடியாமல் துப்பிவிட்டனர். அப்போது கோரா அந்த அன்பர்களிடம் இவ்வளவு புனிதத் தீர்த்தங்களில் மூழ்கியும் பாகற்காய் தன் இயல்பான க்சப்பை இழக்கவில்லை. அதுபோலவே நாமும் எவ்வளவு யாத்திரைகளை மேற்கொண்டாலும் இழிந்த குணங்களாகிய காமம், கோபம், பொறாமை முதலிய கசப்பை நீக்கிக் கொளளும் வரையில் மனம் தூய்மையடையாது. தூய்மையற்ற உள்ளத்தில் கடவுள் தரிசனம் ஏற்படாது. மனத்தூய்மைககு இறைவனிடம் ஆழ்ந்த ஈடுபாடும் சுயநலமற்ற பக்தியுமே சாதனங்கள். இவற்றைப் பயிலுங்கள்" என்று சொல்லி அனுப்பினார்.

--தேனி முருகேசன்.

நன்றி: ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்



# மார்கழி நீராட்டம்

திரு. வி. ராகவன் - சென்னை.

"கனைத்திளங் கற்றெருமை
கன்றுக்கிரங்கி
நினைத்துமுலை வழியே
நின்று பால்சோர" (திருப்பா.12)

என்றவாறு தக்க காலங்களில் கறப்பார் கறவாமையால் இளங் கன்று போன்றிருக்கும் எருமை முலைக்கடுப்பால் நோவுறுவது ஓர் புறம். அப்பால் கட்டிக்கிடக்கும் தன் கன்று என்ன படுகிறதோ என்னும் நினைவின் வேதனை மறுபுறம். இந்நினைவின் முதிர்ச்சியால் கறப்பார் கைவையாத் நிலையிலும் தானே பால் சுரந்து முலைக் காம்பின் வழியே சொரியும். எம்பெருமானும் அவ்வாறே தன்னுடைமையான சீவன்கள் அஞ்ஞான விருளிலே வீழ்ந்து என்னபாடு படுகின்றனவோ என்னும் தன் பொங்கும் பரிவாலே அவைகள் உய்யும் பொருட்டுத் தானே பல அவதாரங்கள் எடுத்தும், சிறப்பாக இராமனாகவும் கிருஷ்ணனாகவும் தோன்றுகிறான். மேலும் அவைகள் உய்யும் வண்ணம் சாத்திரங்கள் பலவற்றையும் அருளுகிறான். அவனை என்றும் விட்டகலாத பிராட்டிமார்களும் அவனெடுக்கும் அவதாரங்களுக்கேற்ப இப்பாரினில் தோன்றுகிறார்கள். இராமனான காலத்து பூமிப்பிராட்டியார் சீதையாகவும், கிருஷ்ணனான போது பெரிய பிராட்டியார் ருக்மிணியாகவும், நீளா தேவியார் நப்பின்னையாகவும தோன்றுகிறார்கள். அவவவதார காலங்களிலே வாழ்ந்தோர் மட்டுமே அவர்களைக் கண்டு உய்ந்திடலாம் படியாயிற்று. பின் புள்ளாரும் தன்னடிபடிந்து உய்ந்திடலாம் வண்ணம் அர்ச்சையாய் திவ்விய தேசங்களிலும் கிராமங்களிலும் அடியார்கள் இல்லங்களிலும் எழுந்தருளியிருந்து சேவை சாதிக்கிறார்கள்.

கலிகுதூகலித்துக் கொட்டமடிக்கும் இவ்வையம் தன்னில் மக்கள்படும் துயர் கண்டு சகியாத தாய் போன்று, உலகிற்கெல்லாம் தாயான பூமிப்பிராட்டியார் 'குன்றாத வாழ்வான வைகுந்த வான் போகந்தன்னையிகழ்ந்து' (உப.ரத்.22) என மேன்மையும் பெருமையும் மிக்க வைகுந்த வாழ்வினையும் கருதாது ஆண்டாளாகத் தோன்றுகிறாள். பல்லாண்டு பாடும் பட்டர் பிரானுக்குச் செல்வக் குமரியாய் வளருகிறாள். கிருஷ்ணன் யுத்தகளத்திலே தேர்த்தட்டில் இருந்து உலகை உய்விக்கவல்ல கீதையை உபதேசம் செய்தான். இவ்வுபதேசம் வடமொழி வல்லுனர் வாயவழி கேட்டு உணரலாம்படி ஆயிற்று. தான் சூடிக்களைந்த பூமாலைகளைச் சூடி உகப்புறும் அவனுககுப் பாமாலைகள் பாடிச் சூட்டினாள. பெண்டிரும் பேதையரும் அறிந்து கொளளலாம் வண்ணம் நாச்சியார் திருமொழி, திருப்பாவை எனனும் இருபிரபந்தங்களை அருளிச செய்தாள். நான்மறைப்பொருளைத் தெள்ளிய தமிழில் "வேதமனைததிற்கும் விததாகும் கோதைத்தமிழ்" என்று மகுடம் சூட்டும் வண்ணம் அவை பிரகாசிக்கின்றன. சீரும் சிறப்புமாய் அடியார்கள் கொண்டாடும் வண்ணம் திருப்பாவை விளங்குகிறது. உலகினை உய்விக்க வேண்டி இங்கு தோன்றிக்கிடப்பவனை, "உம்பர்கோமானே! எழுந்திராய்" "செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா! துயிலெழாய்" "உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே! துயிலெழாய்" (திருப்பாவை 17, 20, 21) என்று வந்த காரியம் மறந்து கிடப்பாரை எழுப்புவது போல் துயிலுணர்த்துகிறாள். மேலும் உலகினுக்கே நல்லுபதேசம் செய்த அவனுக்கே "உன் பொற்றாமரையடியே போற்றும் பொருள் கேளாய்" (திருப்.29) என்று உபதேசம் செய்யும் பெருமையும் பெறுகிறாள். எம்பெருமானின் அழகும் குணங்களும் பிராட்டிமார்களின் ஸ்வரூப ஸ்வபாவங்களும் முழுமையாக அடையப் பெற்றவள் ஆகையால் யோகு துயில் கொள்ளும் அவனையே எழுப்பி உலகை உய்விக்க வேண்டுகிறாள்.

"புள்ளரையன் கோயில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம்
கேட்டிலையோ?" (திருப்பா.6)

என்று அஞ்ஞான விருளிலே மூழ்கிக் கிடக்கும் மக்களையும் இச்சங்கொலி கேட்கவில்லையோவெனக் கேட்டு மாரகழி நீராட்டத்திறகும் எழுபபுவதும் ஆண்டாளே. பறவைகளைக் குறிப்பது "புள்" என்ற சொல். 'அரையன்' எனபதோ பறவைகளுக்கெல்லாம் தலைவனாக விளங்கும் கருடனைக் குறிக்கும். 'கோயில்' எனற சொல் இஙகு வேதத்தைக குறிக கிறது. ஆகவே வேதத்தையே அவயவங்களாக கொண்ட கரு

டாழ்வானைக் குறிக்கும். இதனால் புள்ளரையன் கோயில் என்பது இங்கு கருடாழ்வான் அம்சமாய்த் தோன்றிய பெரியாழ்வாரைக் குறிக்கும். அவரின் செல்வக்குமரியோ ஆண்டாள். வெள்ளை விளிசங்கு தன் பெருத்த ஒலியாலே தன்னிடம் வாருங்கள் என அழைத்திடுகிறது. இச்சங்கின் வடிவோ "ஓம்" என்னும் பிரணவச் சொல்லின் வடிவை ஒத்திருக்கிறது. அப்பிரணவச் சொல்லில் "அ", "உ", "ம" என்னும் மூன்று அக்ஷரங்கள் பொதிந்து கிடக்கின்றன. முதல் எழுத்து "அ" என்பது நாராயணனைக் குறிக்கும். கடையெழுத்தான "ம" என்பது சேதனர்களாகிய மக்களைக் குறிக்கும். நடுவெழுத்தான "உ" என்பது பிராட்டியையும் குறிக்கிறது. ஆண்டாளோ பூமிப்பிராட்டியின் அம்சமாய்த் தோன்றியவள். இதனால் புள்ளரையன்கோயில் வெள்ளை விளிசங்கு என்பது ஆண்டாளைக் குறிக்கிறது. உலகிற்கெல்லாம் தாயாம் தன்மையால் சம்சாரச் சூழலிலே வீழ்ந்துறங்கும் தன் மக்களை துயிலுணர்த்துவது வெகுப் பொருத்தமே!

ஆழ்வார்கள் ஆண்களான தன்மையினால் பெண்ணுடைப் போர்த்தி அவனையணைந்து மேலும் தங்கள் காதல் முழுமையடையா நிலையில் மடலெடுக்க முனைந்தார்கள். பெண்ணைப் பிறந்த ஆண்டாள் மடலெடுப்பதை விடுத்து உபாயமான நோன்பிலே நாட்டம் கொள்கிறாள். தான் மடலெடுத்தால் தீம்பனான கிருஷ்ணனும் வீம்புக்கேனும் மடலெடுப்பான். "இதர உபாயங்களை விடுத்து என்னையே பற்று" என்று சொன்னவனும் அவனே. அவன் வார்த்தைக்கு விரோதமாக உபாயத்தைக் கைக்கொள்ளுகிறாள். இது கண்டு அவனும் நம் சொல்லுக்கு விரோதமாகச் செய்கிறாளே என்று மனம் பதறி இவள் காரியத்தினை உடன் தலைக் கட்டிக் கொடுப்பான் என்று நோன்பிலே மண்டுகிறாள்.

"அஞ்சு குடிக்கொரு சந்ததியாய்
ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சி நிற்கும்
தன்மையளாய்"
(உப.ரத்ந.மாலை 24)

எனச் சிலேடையாகவமைந்த இப்பாசுரம் ஆழ்வார்களை "ஐந்து" குடிகளாகவும், "அஞ்சும்" குடியாகவும் பேசுகிறது. எம்பெருமானுக்கு எப்பொழுது என்ன தீங்கு நேரிடுமோவென அஞ்சிக் கிடக்கும் தன்மையினால் இவர்கள் "அஞ்சும்குடி" என்றாயிற்று. மேலும் மானிடர் போன்று கர்ப்பவாசம் இன்றித் தோன்றியவர்களான பொய்கையார், பூதத்தார், பேயார் ஆகிய மூவரும் ஓர்குடி. திருமழிசையாழ்வார் ஓர்குடி. நம்மாழ்வார் ஓர்குடி. குலசேகராழ்வார் ஓர்குடி. பெரியாழ்வார் ஓர் குடி. ஆக ஐந்து குடிகளாகப் பெரியோர்கள் கொண்டனர். ஆண்டாளுக்குப் பிற்காலத்தவர்களாகிய தொண்டரடிப்பொடியாழ்வார் திருப்பாணாழ்வார் திருமங்கையாழ்வார் ஆகியோருடன் பதிண்மர் ஆன ஆழ்வார்களுக்கெல்லாம் இவள் ஒருவளே சந்நதி. பெண்ணுடைப் போர்த்திட வேண்டாதவாறு பெண்ணைப் பிறந்த ஏற்றத்தால் புருடோத்தமனை அனுபவிக்கும் திறத்தில் "ஆழ்வார்கள் தன் செயலையும் விஞ்சி நிற்கும் தன்மையள்" என்னும் இவ்வினிய சூக்தி ஆண்டாளின் தன்மைக்கு மகுடம் சூட்டியது போலாயிற்று.

"மாதங்களில் நான் மார்கழி மாதமாகிறேன்" என்று கிருஷ்ணன் தானே சொன்னான். தங்கள் பெண்களைக் கிருஷ்ணனுடன் சேரக்



# A HEALING TOUCH

## T. T. DEVASTHANAMS INTRODUCES
## SRI BALAJI AROGYAVARAPRASADINI SCHEME

For ages, Tirumala, the abode of Lord Venkateswara, has been a great centre of pilgrimage. Thousands of devotees visit the sacred hills every day and offer their solemn prayers to the Lord for their spiritual and physical well-being.

Alleviating human suffering has been a part of dedicated efforts of TTD to the mankind. TTD already manages a Leprosorium, centre for physically handicapped, a poor home and a social central hospital. To provide the most advanced medical technology to the needy, the TTD has launched another monument, a blessing from the Lord, by opening Sri Venkateswara Institute of Medical Sciences -- a sophisticated superspeciality centre on the lines of AIIMS of New Delhi & JIPMER of Pondicherry, and PGI of Chandigarh. Total well being of man is the aim of Sri Venkateswara Institute of Medical Sciences which apart from offering service, training and education in medical sciences, also encourages Research and development.

The doors to such a state of the art technology should be open to our poor and disabled brethren.

With a view to achieving this, Sri Venkateswara Institute of Medical Sciences has introduced a New scheme Balaji Arogyavaraprasadini Scheme. To accomplish the goal of providing the sophisticated medical technology to every individual at an affordable rate, we invite the generous co-operation of philanthropists and the general public.

### The Scheme in essence:

A donor can make an endowment of Rs 1000/- or multiples thereof, Rs 1 lakh, Rs 5 lakhs, Rs 10 lakhs to TT Devasthanams which will in turn contribute matching grant. The entire amount will be deposited in fixed deposit in a nationalised Bank and the interest accrued on it will be utilised for providing free medical services to the poor and the needy.

A Chair in Sri Venkateswara Institute of Medical Sciences will be named after the donor who contributes Rs 10 lakhs or above. These endowment chairs are purely research oriented.

- Donations can be made by any individual / family / company / firms etc.
- The name of the donor who endows Rs 5 lakhs or more will be displayed prominently in the Reception hall of the hospital.
- The discharge ticket of the benefited patient will carry the name of the donor.

### Additional Benefit and facilities :

- Donations to Sri balaji Arogyavaraprasadini Scheme are exempted from Income Tax under 80 (G).
- Paid rooms / Air conditioned rooms will be allotted to family members of the donor in the hospital.
- Paid rooms can be named after donors who contribute a sum of Rs 5 lakhs or above.
- By paying Rs 5 lakhs and above, a donor may sponsor one operation per year.
- Donors can sponsor feeding of the In-patients and out-patients. They may also sponsor a travel fellowship for the faculty per year.

All donations, by D Ds drawn in favour of The Executive Officer, T.T. Devasthanams, Tirupati-517 501 (Andhra Pradesh) should reach the Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati along with the following particulars:

- Name and address along with the latest passport-size photographs of the family members of the donor who contributes Rs 1 lakh or more.
- Name and address of the person to whom Income Tax Exemption Certificate is to be issued.

The donors are also welcome to offer equipment, vehicles etc. to SVIMS or even sponsor health camps in rural areas if they so desire. Further details can be had from

**The Executive Officer**
**T.T. Devasthanams, Tirupati**
**or**
**The Director**
**Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati**

**EXECUTIVE OFFICER**



A view of Kapila Teertham, Tirupati.

TIRUMALA TIRUPATI DEVASTHANAMS

# Sri Venkateswara Vanabhivriddhi Scheme

## An Appeal . . .

*He that planteth a tree is the servant of God*
*And Provideth a kindness for many generation*
*And faces that he, hath not seen shall bless him*

Sacred Forests of Tirumala are the precious gift of Lord Venkateswara to mankind. With a view to safeguarding its unique yet delicate ecological condition, Tirumala Tirupati Devasthanams have introduced a series of exciting schemes called **Sri Venkateswara Vanabhivriddhi Schemes.** The Schemes seek to provide a rare opportunity to the public for participation in a massive plantation project implemented by the Forest Department of T T. Devasthanams.

The salient features of Sri Venkateswara Vanabhivriddhi Schemes are:

**VRIKSHA SAMVARDHANAM :** Under this Scheme, about one acre of land will be brought under plantation

**Benefits :**

- Plantation will be named after the donor or person of his choice
- Every year free accommodation on 2 ordinary days at Tirumala for 10 years.
- One paid special darshan every year for 5 persons for 10 years

**Donation :** Rs. 15,000

**VRIKSHA PRASADAM :** The Scheme is proposed for raising 100 fruit and flowering seedling every year.

**Benefits :**

- Distribution of one hundred seedlings, both fruit bearing and flowering in the donor's name every year.
- Two days free stay at Tirumala every year on any ordinary days for 10 years.
- One paid special darshan every year for five persons for 10 years.

**Donation :** Rs. 10,000.

**SMARAKA VANALU :** Under this scheme 10 saplings of selected species will be planted in a grove and maintained for five years.

**Benefits :**

- The grove will be named after the donor.
- Every year paid special darshan for five persons for five years.

**Donation :** Rs. 2,000.

**VANA SAMRAKSHANA BHAGA SWAMYAM :** is proposed to protect and improve the natural forest cover on Tirumala hills.

**Benefits :**

- Diplay of the donor's name.
- Paid special darshan for five persons for one year.

**Donation :** Rs 1,000.

**ADHYAYANA VANALU :** Plantation and maintenance of a variety of species will be taken up under this scheme in the proposed botonical garden at Tirumala.

**Benefits :**

- Display of donor's name near the plant.

**Donation :** Rs. 500.

**VRIKSHA DATTATA :** is a bold scheme featuring adoption and plantation of avenue trees on the ghat road and at Tirumala.

**Benefits :**

- Display of donor's name.

**Donation :** Rs. 250.

We appeal to all devotees to donate liberally and help us to preserve the priceless forest wealth of Tirmala - The Abode of LORD VENKATESWARA.

Please send your donations by Demand draft to the **The Executive Officer, T. T. Devasthanams, TIRUPATI - 517 507.**

**EXECUTIVE OFFICER**

கூடாதென்று தடுத்தவர்கள் இன்று அவன் உதவி கொண்டு மார்கழி நோன்பினைக் கொண் டாடும்படி செய்தனர். மார் கழி மாதமும் மாதமான அவ னும் ஒருங்கே கிட்டின. பிறர் அறியாவண்ணம் அவ னைக் கூட் இருள்தேவை. அவர் களும் இசைந்த இக்காரியத் திற்கு நிலவுதானே தேவை. சந் திரனும் பால்போன்ற வெண் மையான குளிர்ந்த நிலவைப் பொழிய, "திங்கள் திருமுகத் துச் சேயிழையார்" எனச் சந்திரனை ஒத்த திருமுகத்தையு டையார் குழுமியிருக்கும் இட மாதலில் மதிக்குத்தான் குறை வில்லாதாயிற்று.

அறிவின் திறனை ஸ்ம்ருதி, மதி, புத்தி பிரஞ்ஞை என நான்கு விதமாக வகுத்துள் ளனர். சென்றகால நிகழ்ச்சி களை நினைவு கூர்தல் ஸ்ம் ருதி; பின்நிகழும் நடவடிக்கை களை உணர்தல் மதி; அப் போதைக்கப்போது கவனித்து நடத்திடுவது புத்தி; மூன்று கால நிகழ்ச்சிகளை உணர்தல் பிரஞ்ஞை எனப்படும். "மதி யினால் குறள்மாணுக" (திருவா. 1-4-3) எனத் திருமால் மேல் நடக்க வேண்டியதை முன்கூட் டியே யோசித்துப் பிரும்பச் சாரி வாமனனாக மாறினான். பெற்றவரம் தன்னை அகங்கா ரியாக்க மஹாபலி வலுவிலே சென்று இந்திரனுடைய நாட் டைக் கைப்பற்றிக்கொண் டான். தன்னடியானான இந் திரனின் குடியிருப்பை மீட்

டுத்தர வாமனன் ஆனான. தனக்கென்று விரோதியாருமில் லையெனினும் தன்னடியார் களின் விரோதி தன்விரோதி யெனக் கருதுபவன். மஹா பலி அசுரனேயாகிலும் தன் பக்தனாயிற்றே. இராவணனுக் கிட்டதண்டனை இவனுக்குத் தகாது. இவன் அகங்காரத்தை அடியோடு ஒழித்தாலே போதும் எனத் திருவுள்ளம் கொண்டான். ஆகவே, தான் அளப்பத் தன் காலால் மூவடி நிலம் யாசித் தான்.

அவன் தாரை வார்த்துக் கொடுக்க, திருவிக்கிரமனாய் வளர்ந்த இவன் ஒரு திருவ டிக்குள் இப்பூமிப்பரப்பெல்லாம் அடங்கிவிட்டது. தூக்கிய திரு வடியோ மேலுலகங்களனைத் தையும் வியாபித்துக் கொண் டது. "தானே தானம் வழங்க வல்லவன், இப்பரந்த மண்ணும் விண்ணும் தனக்கே சொந்தம்" என்றும் அவனது அகங்காரம் அடியோடு அழியும்படி மூன் றாமடிக்கு இடம் யாதொன் றுமின்றி அளந்து கொள்ளப் பட்டுவிட்டது. மகாபலியும் தன் சிரசையே மூன்றாமடிக்கு இலக்காக காண்பிக்க அவனைத் தன் திருவடியால் பாதாளத் தில் அழுத்தினான். இதுதானே 'மதி' ஆகிறது. இப்பெண்களும், நல்ல மழை பொழிந்து நாடு செழிக்க, அது கண்டு நாட் டார்கள் மகிழ்ந்து இனிது வாழ, தாங்கள் கிருஷ்ணனுடன் கூடிக்குலாவி இன்பமுற, தாங் கள் பெற்ற இன்பம் இவ் வையம் பெற பாமாலை சூட்டி நோன்பு நோற்றலும் "மதி நிறைந்த" ஒன்று தானே.

அவன் ஒருவனுக்கே அடிமைப் பட்டு, அவனுக்கே இனியவர்க ளாய் அவனுக்கே கைங்கர்யம் புரியும் இச்சிறுமிகள் உலகோ ரின் நல்வாழ்வில் நாட்டங் கொண்டு, அடியார்கள்பால் மிக் கப்பரிவுடையர்களாய்த் திகழ் வதால் எம்பெருமானிடம் இவர் களுக்குள்ள ருசி மெய்யாகவே உண்டானது. ஆட்கொண்ட வில்லி ஜீயர் என்பார் நஞ்ஜீ யரிடம், "பகவத் விஷயத்தில் ருசி நமக்கு மெய்யே பிறந்த தில்லை" என்று சொல்ல, "உம் மைப் போல் ஆசார்ய சீலர் யாரேனுமுண்டோ? நீர் இவ்வி தம் அருளிச் செய்யலாகுமோ?' என நஞ்ஜீயர் வினவ, "பகவத் விஷயத்தில் ருசி மெய்யே பிறக் கையாவது பாகவதர்களின் ஸம்ருத்தியைக் கண்டு உகக் கையன்றோ, அஃது இல்லா மையைப் பற்றிச் சொன்னேன் காணும்" என்றாராம். இவ்வி னிய ஐதீகம் இவர்களின் பக வத் ருசிக்கு எடுத்துக்காட்டாகி றது.

"அருங்கனியைத் தனியொரு வன் புசிக்கலாகாது" என்று வைணவ சிந்தாந்தத்திற்கேற்ப அடியார்களான மற்றபெண்பிள் ளைகளையும் எழுப்புகிறார் கள் எனத்தோன்றிடினும் முன் னோர்களான ஆழ்வார்களை எழுப்பி அவர்களை முன்னிட் டுக் கொண்டு நோன்பு நோற்கி றார்கள். திருப்பாவைப் பாசுரங் களின் பொருட்செறிவும் விளிக ளும் இவர்களை எழுப்புவதா கப் பெரியோர்கள் எடுத் துக்காட்டியுள்ளனர். ஆறும் பாசுரமான "புள்ளும் சிலம் பின காண்" என்னுமதில் "புள் ளும் சிலம்பின", "புள்ளரையன் கோயில்" , "பிள்ளாய்" என் னும் விளிகள் பெரியாழ்வாரை துயிலுணர்த்துவதாக அமைந்தது. உலக ரக்ஷக னும் சர்வவல்லமை பொருந்தி யவனுமான நாராயணனுக்கே பெரியாழ்வார் காப்பிட்டுப்பல் லாண்டு பாடினார். பொங்கும் பரிவாலே ஏற்பட்டதே இவ்அஞ் ஞானம். ஆயினும் அறிவில் லாதார் செயலைப் போன்றி ருப்பதால் "பிள்ளாய்" என்பது

இவரைக் குறித்திடுகிறது. பறவைக் கணங்களின் சிலம்புதல் மிகுந்தவிடம் நந்தவனம். இந்நந்தவனமே இவரின் பொழுது போக்குமிடம். மேலும் கருடாழ்வானின் அம்சமான இவரை "புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயில்" என அழைக்கின்றனர்.

"கீசுகீசென்று" (திருப்.7) என்னும் பாசுரம் குலசேகர ஆழ்வாரக்குறிக்கும். "ஏர் மலர்பூங்குழலாயர் மாதர்" (பெரு.திரு. 6) "ஆலைநீள் கரும்பு" (பெருமா. திரு.7) எனத் தன்னை ஆயர் மகளாகவும் தேவகிப் பிராட்டியாகவும் பேசி மகிழ்ந்தவர். மேலும் மூன்றும் திருமொழியில் (பெருமாள்திருமொழி) தன்னைப் பித்தனாகவும், பேயனாகவும் சித்தரித்துக்கொண்டவர். "கூடல்கோன்கொண்டக் குலசேகரன்", "கொல்லிகாவலன் கூடல் நாயகன் கோழிக்கோன் குலசேகரன்" என்றெல்லாம் தான் அரசனான தன்மையைப் பேசி நின்றுர். ஆகவே இவரைப் "பேய்ப் பெண்ணே" என்றும் "நாயகப்பெண்பிள்ளாய்" என்றும் அழைத்திட்டனர்போலும்.

"கீழ்வானம் வெள்ளென்று" (திருப்.8) என்னுமிது நம்மாழ்வாரை எழுப்புவதாக அமைகிறது. கீழ்வானம் வெளுப்பது சூரியன் உதயகாலத்தே. "வகுளபூஷண பாஸ்கரர்" என்னும் நம்மாழ்வார் மணமிக்க மகிழ் மாலையை அணிந்திருக்கும் சூரியன் எனப்படுகிருர். இச்சூரியன் உதித்ததும் இக்கலியுகத்தின் உதயகாலமான 46ஆம் நாளிலே. உட்கார்ந்திருப்பாரை 'எழுந்திரு' என்பது போல் அர்ச்சையில் அமர்ந்த திருக்கோலத்திலே சேவை சாதித்திடும் இவரை "எழுந்திராய்" என்கிருர்கள். லீலா விபூதியென்னும் இப்பூமியே கீழ்வானம் எனப்படும். மேல் வானம் என்பதோ நித்திய விபூதியாம் வைகுந்த வானாட்டைக் குறிக்கும். "ஓராயிரத்துளிப்பத்தும் உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகும் தம் மூரெல்லாம்" (திரு. 5-3-11) "வையம் மன்னிவீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" (திரு. 4-3-11) என்று அவர் அருளியவர்றே இவ்வையம் வைகுந்தமாயிற்று. "கூவிக்கொள்ளும் காலம் இன்னும் குறுகாதோ", "என்னைக் கூவியருளாய் கண்ணனே" என்றெல்லாம் கூவிக் கொள்வதில் நாட்டமுடையவர். ஆகவே "உன்னைக் கூவுவான் வந்து நின்றோம்" என்னும் சொற்போக்கு இவரைப் பற்றியதாகிறது.

"தூமணி மாடத்து" என்னும் 9ம் பாசுரம் திருமழிசையாழ்வாரைக் குறிக்கிறது. "சாக்கியம் கற்றோம் சமணம் கற்றோம் சங்கரனாராக்கிய ஆகம நூல் ஆராய்ந்தோம்" எனப் பலசமயங்களிலும் புகுந்து வந்தவர். "ஆரறிவார் ஞாலத்து ஒரு பொருளை வானவர்தம் மெய்ப்பொருளை அப்பில் அருபொருளையான் அறிந்தவாறு" (நான்மு. திரு.3) என்றும், "என் மதிக்கு விணெல்லாமுண்டோ விலை" (நான்திருவ. 57) என்றும், தன் ஞானத்தைப் பரக்கப்பேசும் இவரை "சுற்றும் விளக்கெரிய" என்னும் விளியால் குறிப்பிடுகின்றர். ஞானத்தை விளக்கிற்கு ஒப்பிடுதல் மரபு. குற்றமற்ற இரத்தினம் குப்பியினுள் கிடந்தாலும் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும். அதுபோல் "உட்கிடந்தவண்ணமே புறம் பொசிந்து காட்டிடே" என்ற இவரின் பிரார்த்தனைக்கிணங்க உள்ளிருந்த திருமால் அப்படியே வெளியில் பொசிந்து காட்டினான். ஆகவே இவர் "தூமணி மாடத்து விளக்கு" ஆனார் போலும்.

பெருமழைக்குத் திருக்கோவலிடைக்ககழியில் நெருக்கிக் கொண்டு இருந்தவர்கள் பொய்கையார், பூதத்தார், பேயார் ஆகிய முதலாழ்வார்கள் மூவரும். அம்மூவருள் முதலாமவர் இரண்டாமவருக்குக் கதவைத் திறந்துவிட்டார். இரண்டாமவர் மூன்றுவருக்குத் திறந்துவிட்டார். மூன்றுமவரான பேயாழ்வார் யாருக்கும் கதவு திறக்கவில்லை. ஆகையால் "வாசல் திறவாதார்" என்றும் விளி இவருக்குப் பொருந்தும். முன்னவர் இருவரும் விளக்கேற்றி இருளை அகற்றினர். "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" (3ம் திருவந்.1) என்று பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியழகைக் கண்டு ஆனந்தித்தது இவரே. சுவர்க்கம் என்பது ஆனந்தத்தைக் குறிக்குமாதலால் "நோற்றுச் சுவர்க்கம்" என்னும் பத்தாம் பாசுரம் இவரை உணர்த்துகிறது.

"கற்றுக் கறவைக் கணங்கள்" என்னும் 11ம் பாசுரம் பூதத்தாழ்வாரைப் பேசும். "கோ" என்னும் சொல் ஸ்ரீசூக்திகளைக் குறிக்கும். ஆகவே ஸ்ரீசூக்திகளை அருளிச்செய்த ஆழ்வார்களைக் கோவலர் என்பர். முதலாழ்வார்கள் மூவரும் கர்ப்பவாசமின்றித் தோன்றியவர்கள் ஆதலால் குற்றமற்றவர்கள். "கோல் தேடியோடும் கொழுந்ததே போன்றதே மால் தேடி ஓடும்மனம்" (2ம் திருவ.27) எனத் தன்னை ஒரு கொடியாகப் பாவித்துக் கொண்டவர்.

ஆகையால் இவர் பொற்கொடியாகிறார். இதனால் "குற்றமொன்றில்லாத கோவலர் தம் பொற்கொடியே" எனக் குறிப்பிடப்படுகிறார்.

"கனைத்திளங் கற்றெருமை கன்றுக்கிரங்கி" 12ம் பாசுரமானது பொய்கையாழ்வாரைக் குறிக்கிறது. "பழுதேபலபகலும் போயினவென்று அஞ்சி அழுதேன்" (1ம் திருவந்.16) என்று சென்ற காலத்தை நினைந்தும் வருங்காலத்தைக் கண்டு அஞ்சியும் இவர் அழுத கண்ணீர் பெருக்கெடுத்தோடி தரையைச் சேறாக்கியது போலும்! ஆகவே "நனைத்தில்லம் சேறாக்கும்" என்னும் விளி இவருக்கேயுரியதாகிறது. மேலும் "பூமேயமாதவத்தோன் தாள் பணிந்தவாளரக்கன் நீண்முடியைப் பாதமத்தால் எண்ணினான்." (1ம் திருவ. 45) எனத் தவச்ரேஷ்டர்களுக்கும் தோன்றாத இந்த இராமாயண விருத்தாந்தம் எம்பெருமான் காட்டக் கண்டனுபவித்தவர். வேடதாரியாய் இராவணன் பிரும்மாவிடம் வரம் வேண்ட திருமால் ஒரு குழந்தையாய் பிரும்மாவின் மடியில் கிடந்து தன் கால் விரல்களால் வரம் வேண்டி வந்தவன். பத்துத் தலை இராவணன் என எண்ணிக் காட்டினான். இவ்வாறு இராமாயணம் சொல்லும் இவரை "சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற" என இராமாயண விருத்தாந்தம் சொல்லி எழுப்புகிறார்கள்.

13, 14, 15ம் பாசுரங்களான "புள்ளின்வாய்கீண்டானை", "உங்கள் புகழைக் கடைத்தோட்டத்து", "எல்லேயிளங்கிளியே" ஆகியவை ஆண்டாளுக்குப் பிற்காலத்தவர்களாகிய தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய மூவரையும் குறிப்பதாகிறது. இது எவ்வாறு சாத்யம் என்னும் சங்கை தோன்றுகிறது. ஆழ்வார்கள் அனைவரும் எம்பெருமானாலே மயற்வற்ற மதிநலம் அருளப் பெற்றவர்கள். அவனின் முக்கால நடவடிக்கைகளையும் அவன் காட்டக் கண்டனுபவித்தவர்கள். ஆண்டாளோ பூமிப்பிராட்டியாரின் அம்சமாய்த் தோன்றியவள். பிராட்டிமார்களின் ஸ்வரூபரூப குணங்களும் எம்பெருமானின் அழகும் குணங்களும் கொண்டவள். மேலும் ஆழ்வார்கள் பதின்மருக்கும் தானே சந்ததியாய் அவர்கள் ஞானம் சீதனமாகக் கொண்டவள். ஆகையால் காலத்தால் தனக்குப்பின் தோன்றியவர்களாயினும் அவர்களையெழுப்புவதாகக் கொள்வதில் குறையொன்றுமில்லை.

"துளபத்தொண்டாய தொல்சீர் தொண்டரடிப்பொடி (திருமாலை 45) "தொடையொத்த துளவமும் கூடையும் பொலிந்து தோன்றியதோள் தொண்டரடிப்பொடி" (திருப்பள்ளி 10) என்று தொண்டரடிப்பொடியாழ்வார் தன்னை நிரூபித்துக் கொண்டவர். காலத்தில் மலர்களைக் கொய்வதில் கண்ணுங்கருத்துமாய் இருப்பவர். ஆகவே "போது அரிக்கண்ணினாய்" என இவரைக் குறிக்கிறார்கள். திருவேங்கடமுடையான் சன்னதியில் ஒருவர் "பதின்மர் பாடும் பெருமாள்" என்று அரங்கனுக்கு ஏற்றம் கூறிட, மற்றவர் "சோழியன் கெடுத்தான் காணும்; அவ்வேற்றம் நம்பெருமாளுக்கில்லை. நம்பெருமாள் ஒருவர்க்கே" என்றாராம். ஆக அரங்கனைத் தவிர மற்ற எம்பெருமான்களைக் கருத்திலும் கொள்ளாதவர். கற்புக்கரசியை "பாவாய்" என்றழைப்பது போல் இவரையும் "பாவாய்" என அழைக்கிறார்கள் இதனால் "புள்ளின்வாய்க்கீண்டானை" என்னும் 13ம் பாசுரம் இவரைப் பேசுவதாகிறது.

14ம் பாசுரமான "உங்கள் புழைக்கடைத் தோட்டத்து" என்னுமதால் திருப்பாணாழ்வாரை உணர்த்துகிறார்கள். அடியார்களின் வேண்டுதலுக்குச் செவிசாய்ப்பதே பாரதந்திரியமாகும் என்பதற்கேற்ப சாரங்கமுனிவரின் தோளில் ஏறியமர்ந்தது இவரின் குணபூர்த்தியைக் காட்டுகிறது. குணபூர்த்தியுடையாரை "நங்கை" என்பதால் "நங்காய்" எனப்படுகிறார். "கையினார் சுரிசங்கனலாழியர்" என்றும் "கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய கண்கள்" என்றும் (அமலனாதி 7-8) சங்கு சக்கரங்களையேந்தி இருக்கும் அழகிலும் கண்ணழகிலும் ஈடுபட்டமையை "சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையன் பங்கயக் கண்ணனைப் பாட" என்னும் சொற்களால் உணர்த்துகிறார்கள்.

"எல்லே இளங்கிளியே" (15ம்பாசுரம்) என்பது திருமங்கையாழ்வாரை எழுப்புவதாகிறது. இப்பாசுரம் உள்ளிருப்பவர்களுக்கும் வெளியிலிருப்பவர்களுக்கும் நிகழ்ந்த உரையாடல் போன்று இவரருளிய "மானமருமென்னோக்கி" (பெரியதிரு.11-5), என்னும் பதிகமும் இவ்வாறே அமைந்துள்ளது. "மென்கிளிபோல் மிக மிழற்றுமென் பேதையே"

என்று தன்னை ஒரு மென் கிளியாகக் கூறிக் கொள்ளும் இவரை "இளங்கிளி" எனவழைப்பது வெகு பொருத்தமே. ஆழ்வார்கள் பன்னிருவர் என்னும் சங்கியை இவருடன் முடிவடைகிறது. ஆகையால் "எல்லாரும் போந்தாரோ போந்தார் போந்தெண்ணிக்கொள்" என்பதின்றும் இந்த சங்கியை முழுமையாயிற்று என்று சொல்லி இவரைக் குறிப்பிடுகிறார்கள்.

தன்னை எதிர்ப்பாரை வீர பராக்ரமத்தால் வெல்லுவான். இசையாதாரைத் தன்னழகால் ஈர்ப்பான். தன்னடி பணிந்த அடியார்களிடம் தான் தோற்று நிற்பன். இதனால் திருமால் "கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தன்" எனச் சிறப்பிக்கப் படுகிறான். அவனொருவனுக்கே உரியராய், அவனை அனுபவிப்பதிலே இனியராய், அவன் கைங்கர்யத்திலேயே நாட்டம் கொண்டவராய்த் திகழும் இச்சிறுமிகளிடம் கிருஷ்ணன் தோற்றுக்கிடக்கிறான். இவர்கள் சொற்கேட்டுக் காரியங்கள் புரியுமவனாகத் தோன்றுகிறான். "அணிமிகு தாமரைக் கையன்" என்று சிறப்புமிக்க கையனான இவன் "கைத்தலம் பற்ற" (நாச். திரு. 6-6) எனத் தான் முதலில் பிடிக்கும் அவர்கள் கைக்கும் காப்பும், தான் அணைத்திடும் தோளுக்குத் தோள்வளையும், "கண்டேன் கன மகரக் குழையிரண்டும்" என விளங்குபவன் தனக்கேற்றப்போல் இவர்கள் காதுக்குச் செவிப்பூவும், "தாள் பற்றி அம்மி மிதிக்க" (நாச்.திரு. 6-8) எனத் தாள் பிடித்திடும் அவர்கள் காலுக்குப் பாடகமும், "பெருமாளரையில் பீதக வாடைகொண்டு" (நாச்.திரு.13.1) என அவன் அணிந்து கொண்ட மணமிக்க ஆடைகளையும் கிருஷ்ணனும் நப்பின்னையுமான சேர்த்தியில் அணியப்பெறும் பெரும் பாக்கியமும் பெறுகின்றனர்.

உடன் இருந்து இராமனுக்கு கைங்கர்யம் புரிந்திட்ட இலக்குமணன் "கைங்கர்ய சீமான்" எனவும் தன்னுடையது என்னும் அத்தனையையும் விடுத்து வானத்தே பறந்து வந்து இராமனைப்பற்றிய விபீடணன் "ஆகாயத்தே பறந்து வந்த சீமான்" எனவும் அவனே ரக்ஷகன் என்னும் விசுவாசத்துடன் தன்னைக் காத்துக் கொள்ளும் தன் முயற்சியினின்றும் மீண்ட கஜேந்திரன் "ஆளுரியச் சீமான்" (ஸதுநாகவர ஸ்ரீமான்) எனவும் சிறப்பிக்கப்படுகின்றனர். இப்பெண்பிள்ளைகளோ அவனிடம் காப்பு என்று "திருப் பொலிந்தசேவடி என் சென்னி மேல் பொறித்தாய்" (பெரியா. திரு.5-4-7) என திருமண்காப்பையும், தோள்வளையென்று "தீயிற் பொலிகின்ற செஞ்சுடராழி திருச்சக்கரத்தின் கோயிற்பொறியாலே ஒத்துண்டு" (திருப்பல்-7) என்று திருவிலச்சினையும் தோடு என ஞானத்தை வழங்கிடும் எட்டெழுத்தான திருமந்திரத்தையும், செவிப்பூவென்று பக்தியை ஊட்டும் துவையம் என்னும் மந்திர ரத்தனத்தையும் பாடகம் எனச் சொல்லி வைராக்யத்தை உண்டாக்கிடவல்ல சரமஸ்லோகத்தையும் வேண்டிப்பெறுகின்றனர். பத்ரிகாச்ரமத்திலே திருமந்திரத்தையும், வைகுந்தத்திலே துவையத்தையும், தேர்த்தட்டிலே சரமசுலோகத்தையும் உபதேசித்த அப்பரமகுருவான அவனிடமிருந்தே சம்மானமாக "வைஷ்ணவஸ்ரீ" ' என்னும் பெரும் பேற்றை அடைகின்றனர். "உனக்கே நாமாட் செய்வோம்" என்றும் தெளிந்த ஞானத்தையும் வேண்டிப்பெறுகின்றனர்.

உபாயங்களில் தலையாயது என்னும் பொருளுடைய "மார்க்க சீர்ஷம்" என்னுமதின் தமிழாக்கம் "மார்கழி" என்பது. நாளில் பிரும்ம முகூர்த்தத்தில் (அதிகாலை) பயிர்கள் முளைவிடுவதுபோல் ஆண்டில் மார்கழி மாதம் சத்துவ குணம் தலையெடுக்கும் காலம். இக்காலத்தில் நாயகனாம் கிருஷ்ணனோடு கூடி அனுபவிப்பதே நீராட்டமாம். இவ்விதச் சிறப்புக்களைக் கொண்ட இக்காலத்தில் திருப்பாவை பாடி எம்பெருமான் திருவடி பணிந்து நல்வாழ்வினை பெற்றிடுவோமாக!



## அறிவிப்பு

சம்பந்தப்பட்ட கோயில்களின் விண்ணப்பங்களின் பேரில் தி.தி. தேவஸ்தானம் கோயில் குடைகளை சலுகை விலையில் வழங்கி வருகின்றது. இக்கோயில்கள் இந்து சமய அற நிலையத்துறையின்கீழ் பதிவு செய்யப்பட்டதாகவும், சம்பந்தப்பட்ட கோயில் செயலாட்சி தலைவர்களின் விண்ணப்பங்களின் வாயிலாகவும் அனுகுதல் வேண்டும். தற்போது இக்குடைகளின் விலை ரூ. 1000/- லிருந்து ரூ. 900/- ஆக குறைக்கப்பட்டுள்ளது. முழுத்தகவல்களுக்கு ஆங்கிலத்தில் கீழ்வரும் முகவரியுடன் தொடர்பு கொள்ளுதல் வேண்டும். "செயலாட்சித் தலைவர் (E.O.) தி.தி. தேவஸ் தானம், திருப்பதி-517501"

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

திரு. மா. வரதராஜன் - திருப்பதி.

## உ

உண்ணீர் - உள்ளேயிருக்கும் கண்ணீர்
உண்ணுஞ் சோறு - உண்ணத்தக்க சோறு
உண்ணுழிகை - கர்ப்பகிரஹம்
உண்மானம் - உள்நிலை
உணக்கி - துவளும்படி பண்ணி; நெருக்கி
உணங்கல் - உலர்ந்த தானியம்; புழுங்கல் நெல்
உணர்ந்தவர் - அறிவுடையார்
உணர்வம் - ஞான ஸ்வரூபமான ஆத்மா
உணர்வு - அறிவு
உத்தமர் - தலைவன்; தன்னை அழியமாறியாகிலும் பிறர் வாழவேணும் என்னுமவன்
உத்தரவேதி - யாகசாலை
உத்தரைதன் சிறுவன் - பரீக்ஷித்து ராஜா.
உத்தானம் - பிறந்த குழந்தையை வெளிக்கொணர்தல்
உதரபந்தம் - வயிற்றிலே பூட்டும் ஆபரணம்; ஒட்டியாணம்
உதறிப்படுத்தல் - ஐயம் களைதல்
உதிகுவடு - பாண்டி; சோறு
உதிர்நெல்லுப் பொறுக்குகை - அறுவடையில் ஏராளமாய் விளைந்திருந்த உதிர்ந்த நெல்லைப் பொறுக்கிக்கொண்டிருக்கை.
உதிரக்கூறை - இரத்தம் பட்டதுணி
உதிரத்தெறிப்பு - இரத்த சம்பந்தமான உறவு
உதிரி - உதிர்ந்தது
உதைப்பளவு - ஒருநொடிப்பொழுது
உது - தூரத்திலுமில்லாமலும் பக்கத்திலும் இல்லாமலும் சற்று விலகியிருப்பது
உந்துதல் - தள்ளுதல்
உந்தமடிகள் - உங்கள் எஜமானர்
உந்தவுந்தி - தள்ளத்தள்ளி
உந்தி - திருநாபி
உந்திப்பூ - நாபீகமலம்
உந்திபறக்கை - குதித்துப்பறக்கை
உந்துகை - எழுப்புகை; நடத்துகை
உந்தை - உங்கள் தகப்பனார்
உப்பறியாதது - கரண்டி ரஸம் அறியாது
உப்புச்சாறு - அமிருதம். கடலிலே கிடைத்த சாறுகையால் உப்புச்சாறு என்று ஏளனமாகச் சொல்லுவர். கடல் என்றால் பொதுவாக உப்பாகையால், திருப்பாற்கடலில் கிடைத்த அமுதத்தையும் உப்புச்சாறு என்று பரிஹாசமாகச் சொல்லுவர். மேலும் தேவர்கள் சாவாமைக்கு மருந்தாக அமிருதம் தேடினார்களேயன்றி, இறைவனை அடைவதற்காக அல்ல. அமுதம் கடைந்து எடுத்த இறைவனைக்கொண்டு நற்கதி பெறுவதைவிட்டு, அவன் கொடுக்கும் அமுதமே வேண்டும் என்று தேவர்கள் விரும்பியதால், உப்புச்சாறு குடித்த தேவர்கள் என்று வைணவ உரையாசிரியர்கள் உரைகளில் எழுதியுள்ளனர்.
உப்புச்சாறு - ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாச்சியார் தினமும் இரவில் அமுது செய்யும் குழம்புக்கும் உப்புச்சாறு என்றே பெயர்.
உபாயம் - வழி, விரகு
உபலக்ஷணம் - அடையாளம், ஒரு இடத்தைக் குறிப்பிடுவதற்கு உதவும் அறிகுறி; மயிலுள்ள இடம் பொன்னன் வயல் என்றால் வயலுக்கு மயில் உபலக்ஷணமாகும்.
உபாதானம் - முதற்காரணம்
உபகரணம் - சாதனம்; கருவி
உபோத்காதம் - ஆரம்பம்; தொடக்கம்
உம்பர் - மேலிடம்; தேவர்கள்
உம்பர்கோன் - இந்திரன்
உம்பர் வாழ்வு - பிரமன் முதலாவனவர்களின் செல்வம்
உம்பர் வாளி - பிரம்மாஸ்த்திரம்;
உம்பர் வாய் - ஆகாசம்
உம்பர் வானவர் - மேலான நித்யசூரிகள்
உம்பரவன் - மேலான பரமபதநாதன்

| | |
|---|---|
| உம்பராளி | நித்ய சூரிகள் |
| உம்பி | உன் தம்பி |
| உமர் | உன்னைச்சேர்ந்தவர் |
| உமணர் | உப்பு வாணிகர் |
| உமை பங்கன் | உமையைத் தன் சரீரத்தில் ஒரு பக்கத்தில் உடைய சிவன் |
| உய்ந்திருந்தேன் | பிராணன்களை வருந்தித் தரித்திருந்தேன் |
| உய்ந்தம் | உய்ந்தோம்; பிழைத்தோம் |
| உயர்த்துணர்வு | ஞானம் |
| உய்த்தல் | அனுபவித்தல் |
| உய்யார் | அநுபவிக்கமாட்டார்கள்; உய்த்தலைச் செய்யார் |
| உய்வழக்கு | உய்யும் வழி |
| உய்விடம் | பிழைக்குமிடம் |
| உய்வுபாயம் | ஈடேரும் வழி |
| உய்யானம் | சோலை; உத்யானம் |
| உயங்கல் | வருத்தம் |
| உயர்திணை | மக்கள்; தேவர் |
| உயர்ந்தோர் | ஞானிகள் |
| உயர்ந்தோர் மாடு | ஞானிகளிடம் |
| உயரத்தொருத் தன் | ஒப்பற்றவன் |
| உயவுதல் | உசாவுதல்; வருந்துதல்; வார்த்தை சொல்லுதல் |
| உயிர்க்கும் | பெருமூச்சுவிடுதல் |
| உயிர்ப்பிடம் | மூச்சுவிடுமிடம்; பிழைப்பிடம் பிழைக்குமிடம் என்று உலக வழக்கு. |
| உயிராளன் | ஆத்மாக்களை ஆண்டு போகி றவன் |
| உயோகுதுயில் | யோக நித்திரை |
| உரகம் | பன்னகம்; பாம்பு |
| உரப்பாள் | அதட்டாள் |
| உரம் பற்றி | மார்பை அமுக்கி |
| உரவிடை | மார்பிடை, உரம்-மார்பு, உரத் தவிடை, உதரம் என்று இடைக்குறையாய் உரவிடை-உதரத்திடை, ஆப்புண்டு-வ யிற்றில் கட்டுண்டு |
| உரவு | மிடுக்கு; வலி |
| உரி | தோல் |
| உரித்து வைத்-தார் | வெளிப்படுத்தி வைத்தார். தாத்தா சாயலை உரித்து வைத்து இருக்கிறது என்று சொல்லுவர். தாத்தாவைப் போலவே பேரனுக்கு எல்லா குறிப்புக்ளும் முகச்சாடைக ளும் நிறைந்திருப்பதைப்பற்றி இப்படிச் சொல்லுவர். |
| உரிஞுறை கொள்ளுகை | துணி முதலாகக்கொள்ளையி டுகை |
| உரிய சொல் | தகுதியான சொல் |
| உரியதள் | உரித்ததோல் |
| உருக்கலந்து | வடிவழகோடு |
| உருக்கள் | சரீரங்கள் |
| உருக்காட்டான் | நேரில் வந்து நில்லான் |
| உருக்கி | நீர்ப்பாண்டமாக்கி |
| உருகுபதம் | உருகுதற்குரிய நிலைமை |
| உருப்பசி | ஊர்வசி |
| உருப்பன் | ருக்மன், ருக்மிணியின் தம்பி |
| உருப்பிணி | ருக்மிணிப்பிராட்டி |
| உருப்பொலிகை | தழும்பேறுகை |
| உருவ | அநேககாலம், கடைசிவரை. உருவ நடத்தா-கடைசி வரை செல்ல |
| உருவமலர் | அழகிய மலர், தாமரை |
| உருவறை | அழகில்லாதது; உருவமற் றவை |
| உருவறைக்கோ பாலர் | உடலை அழுக்கறுத்துப்பேண மாட்டாதவர் |
| உருவினன் அரு-வினன் | உரு-அறிவற்றபொருள் அரு-ஆத்மா |
| உருவினார் பிறவி | நித்யமான ஆத்ம வஸ்து வுக்கு பிறவியாகிறது, நுண் ணிய உடலோடு கூட பெருத்த உடலில் புகுகை, உடல் கலந்த பிறவி. 'இன்' சாரியை வந்து உருவிலே ஆர்ந்த பொருந்தின பிறவி. |
| உருவெளிப்பாடு | அறிவின் தெளிவு. நேரில் உள்ளது போன்று மனத்திற் குத் தோற்றம் |
| உருள் சகடு | உருளும் வண்டி |
| உலகந்தாயவன் | உலகத்தை அளந்தவன் |
| உலங்கு | பெரும்நுளம்பு; பெருங்கொசுகு |
| உலங்குண்ட விளங்கனி | உலங்கு - பெருநுளம்பு மொலுங்குப்பூச்சி, சுவை விளாம்பழத்தில் மொய்த்தவு டன் அதன் ரஸம் எல்லாம் குடித்துவிடும். |
| உலத்தல் | அழிதல்; குறைதல் |
| உலப்பு | முடிவு; நாசம்; அளவு |
| உலோகபாவீர் | எட்டுதிசையிலுள்ள பாலர்கள் |
| உலோகமலோ கம் | மனிதர்களும் மிருகங்களும் |
| உலோபன் | ஒன்றிலும் குறையற்றிருந் தான். அதாவது உடலை விரும்புவது உயிரைப் பேணு வது செய்யாதிருக்கை |
| உவணப்புள் | உவணமாகிறபுள், உவணம்-பெ ரிய திருவடி (கருடன்) |
| உவனியம் | உபநயனம் |

| | | | |
|---|---|---|---|
| உவனியப் பிறப்பு | - உவனியப்பிறப்பாவது உபநயனம் ஆகி உண்டாகும் இரண்டாம் பிறப்பு. பிராமணனாகை | உள்ளுறை | - உள் விஷயம்; கருததுப்பொருள் |
| உவா | - பௌர்ணமி, பருவம், அமாவாசை, பௌர்ணமி முதலிய நாட்களை பருவம் என்பர். உவா என்பது அமாவாசை பௌர்ணமி ஆகிய இருநாட்களைக்குறிக்கும். | உள்ளீடு | - விஷயம் |
| உவாத்து | - உபாத்தியாயன் | உள்மாணம் புறமானம் ஆராய்கை | - உள்ளங்கால் சிவப்பும் மேலகறுப்பும் கவனிக்கை; உள்ளும் புறமும் நன்கு ஆராய்கை |
| உழுக்கோல் | - தாற்றுக்கோல், சாட்டை நுனியில் ஆணி குத்தியிருக்கும். அதற்குத் தாற்றுக்குச்சி என்று பெயர். அதனையே இங்கு தாற்றுக்கோல் என்பர். உழக்கும் கோல்; அதாவது வருத்தும் கோல். | உள்வால் வேண்டுதல் | - நீருள் நீச்சலுக்குப் புனையாகப் பசுக்களின் வாலைப்பிடிக்க வேணடியிருததல். ஆறுகளில் பசுக்களை ஓட்டி அதன் வாலைப்பிடித்து நீந்துவது காணலாம். |
| உள்ளாதார் | - நினையாதார் | உள்வெதுப்பு | - உட்சுரம் |
| | | உறநோக்குதல் | - குறிப்பாகப் பார்த்தல் |
| | | உறுநோய் | - அநுபவிக்கவல்ல நோய் |
| | | உறுபூசல் | - கைகலந்த யுத்தம். உறு-பெரிய, பூசல்-போர் |
| | | உறைப்பன் | - மிடுக்கன் |
| | | உன்தரவு | - சீட்டு |



## 'க்யூ' கொட்டகைகளில் யாத்திரிகர்களுக்கு வசதிகள்

* 'க்யூ' கொட்டகைகளில் இருக்கும் யாத்திரிகர்களின் காத்திருக்கும் நேரத்தை கணிசமாகக் குறைக்கும் வகையில், தினசரி சேவை நேரங்களில் பல மாற்றங்களை தி.தி தேவஸ்தானம் செய்துள்ளது. அதே சமயத்தில் கொட்டகைகளில் இருக்கும் யாத்திரிகர்களுக்கு வெகுநேரம் காத்திருக்கும்படியான ஒரு களைப்பு சூழ்நிலையை நீக்கும் வகையில் கீழ்வரும் வசதிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன
* மிகவும் விசாலமான சுகாதாரமான, காற்றோட்டமான பெரிய கொட்டகைகளில் மின் விசிறிகள் பொருத்தப்பட்டுள்ளன.
* காஃபிபோர்டு நிறுவனத்தாரால் உள்ளே உணவு வகைகள் விற்பனை.
* நியாயமான விலையில் உணவுப் பொட்டலங்கள் விற்பனை.
* ஆந்திரமாநில பால்வள நிறுவனத்தாரின் சுத்தமான பால்விற்பனை.
* தி.தி. தேவஸ்தானத்தாரால் வெளியிடப்பட்ட தெய்வ வண்ண உருவப்படங்கள், மற்றும் நூல் வெளியீடுகள் விற்பனை.
* 'க்யூ' வரிசைகளிலும் மறைப்பிட வசதிகள்.
* வரையறுக்கப்பட்ட எல்லைக்குள் ஒலிபரப்பப்படும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள்.
* பக்தி நிகழ்ச்சிகள், இசை போன்றன ஒலிபரப்பப்படல்.
* 'க்யூ' கொட்டகைகளின் வாயில் அருகேயே 'காலணிகளை' வைப்பதற்கான வசதிகள்.
* தலாளிகள் மற்றும் ஏமாற்றுப் பேர்வழிகளின் தவறான வழிகளைத் தடுப்பதற்கும், புகார்களை ஏற்று உதவி செய்யவும் கோயில் வாயிலருகே (முகத்துவாரம்) அலுவலர் ஒருவர் நியமிக்கப்பட்டிருத்தல்.
* 'க்யூ' கொட்டகைகளில் யாத்திரிகர்களின் தேவைகளையும், வசதிகளையும் கவனிக்க அலுவலர் ஒருவர நியமிக்கப்பட்டிருத்தல்.

வைணவர்களின் நூற்றியெட்டு திவ்யதேசங்களிலே ஒன்று திருக்கண்ணமங்கை. கிருஷ்ணமங்கள க்ஷேத்ரம் என்று இதனைச் சொல்வார்கள். கும்பகோணத்திலிருந்தும், திருவாரூரிலிருந்தும் போகலாம். கோயிலுக்கு வேண்டிய விமானம், மண்டபம் - அரண்யம், ஸரஸ்ஸு, க்ஷேத்ரம், ஆறு, நகரம் ஆகிய ஏழு அம்சங்களும் அமுதமயமாக இருப்பதால் இதற்கு 'ஸப்தாம்ருத க்ஷேத்ரம்' என்றும் பெயருண்டு.

இந்தத் திருத்தலத்திற்கு மங்களாசாசனம் செய்ய வருகிறார் திருமங்கையாழ்வார். நின்ற திருக்கோலத்தில் இருக்கும் பக்தவத்ஸலப் பெருமாளைப் பார்க்கிறார். பெருமாளுடைய முகத்திலே ஏதோ ஓர் குறிப்பு புலப்படுகிறது ஆழ்வாருக்கு. உற்று கவனிக்கிறார். புரிந்துவிட்டது பெருமாளின் ஆசை!

ஆழ்வாரின் பாடல்களின் ஆழ்பொருளை ஆழ்வார் மூலமே கற்றுக்கொள்ளும் அந்த ஆசை புரிகிறது!




**“........மெய்ம்மை சொல்லில்**
**வெண்சங்கமொன்றேந்திய**
**கண்ணா! நின் தனக்கும் குறிப்பாகில்**
**கற்கலாம் கவியின் பொருள்தானே!”**
(பெரி.திரு. 7-10-10)

என்றுபாடி, “கண்ணா! உன் விருப்பத்தை நிறைவேற்றுவதன்றோ எனக்கு இனிது. நீ என்னிடமிருந்து கவியின் பொருளைக் கற்றுக்கொள்ளலாம்” என்று நியமிக்கிறார்.

கண்ணன் மெல்ல ஆழ்வாரிடம் கீழ்வருமாறு சொல்கிறான்:

“ஆசைதான் எனக்கு! ஆனால், இந்த அர்ச்சாவதார நிலையில் அது முடியாதே, சரி அதற்கும் வழிசெய்வோம். நீர் இன்னொரு சமயத்திலே உமது திருநாமமான 'திருக்கலிகன்றிதாசர்' என்ற திருநாமத்துடன் அவதரிப்பீர். நான் உம் சீடனாக க்ருஷ்ணன் என்ற பெயரோடு அவதரிப்பேன். உம்மை ஆசார்யனாகிக் கொண்டு, அருளிச் செயல்களின் அர்த்த விசேஷங்களையும் இன்னும்பிற ரஹஸ்யார்த்தங்களையும், ஸ்ரீராமாயணார்த்தங்களை

# விரிவுரைப் பேரரசர் பெரியவாச்சான் பிள்ளை

திரு. பாரதிநாதன் - புவனகிரி.

யும் உம்மிடம் இருந்து கற்றே உலகுய்ய வெளிப்படுத்துவேன்.'

இறைவன் வாக்கு பொய்க்குமா! திருமங்கையாழ்வார் நம்பிள்ளையாக அவதரிக்கிறுர். கிருஷ்ணர், 'க்ருஷ்ணன்' என்ற தன் சொந்தப் பெயரோடு ஸர்வஜித் வருஷம், ஆவணியிலே ரோஹிணி நக்ஷத்திரத்திலே, திருவெள்ளியங்குடிக்கு அருகிலுள்ள சங்கநல்லூரில் (சங்கநல்லூர் - கும்பகோணம், அணைக்கரை பாதையில் இருக்கிறது. பெரியவாச்சான் பிள்ளையின் அவதார ஸ்தலம் என்று காட்டும் வகையிலே ஓர் அலங்கார வளைவும் வைத்திருக்கின்றுர்கள்.) யாமுநாசார்யர் - நாச்சியாரம்மன் தம்பதிகளின் குலக்கொழுந்தாய் வந்து அவதரித்தார்.

சங்கநல்லூரில் பிறந்தது தவிர, இவர் வாஸமெல்லாம் ஸ்ரீரங்கத்தில்தான். பெருமாளை தரிசனம் பண்ணி, அருளிச்செயல்களை காலட்சேபம் செய்வதைத் தவிர, வேறு எச்சுவைபெறினும் வேண்டாதவராயிற்றே!

இவர் ஆஸ்ரயித்தது நம்பிள்ளையின் திருவடி! அவரிடம் ஏற்கனவே வாக்குக் கொடுத்தபடி சகல அர்த்த விசேஷங்களையும் கேட்டார். அவர் நியமனம் பெற்று அவைகளை ஓலைகளில் பதித்தும் வைக்கிறுர்.

நம்பிள்ளை பரமபதித்த பிறகு, வடக்குத்திருவீதிப்பிள்ளையுடன் இணைந்து, வைணவ தர்சனத்தை - எம்பெருமானார் தர்சனத்தை - நிர்வகித்து வருகிறுர்.

ஆழ்வார்களிலே பெரியாழ்வாரைப்போல, ஆசாரியர்களிலே பெரியவாச்சான் பிள்ளைக்கு ஒரு பெருமையுண்டு. நாலாயிரம் முழுமைக்கும் உரை கண்டவர் அவர். அவர் வியாக்கினங்கள் இல்லையேல் வைணவ உரைவளம் நலிந்து போயிருக்கும். பல்வேறு ரஹஸ்யார்த்தங்களையும் மிக எளிமையாக விளக்கியவர் பெரியவாச்சான்பிள்ளை. ஸ்ரீராமாயண அர்த்த விசேஷங்களை அருளிய ஞானாசிரியர் இவர்.

இதற்கு முன் தோன்றிய பூர்வாசிரியர்கள் சமஸ்கிருதத்திலே பெரும்பாலும் வியாக்கினங்களைச் செய்தார்கள். இவர் சமஸ்கிருதத்திலே வியாக்கினங்களைச் செய்வது கிடையாது என்று உறுதி எடுத்துக்கொண்டார். வடமொழியும் தென்மொழியும் கலந்த மணிப்பிரவாள நடையிலே, வளமான உரையைச் செய்தருளினார்.

நல்ல சிஷ்யனாய் இருப்பவர் தான் நல்ல ஆசார்யனாகவும் இருக்கமுடியும். பெரியவாச்சான்பிள்ளை சிஷ்ய லக்ஷணம், ஆசார்ய லக்ஷணம் இரண்டிற்கும் எல்லை நிலமாக விளங்கினார். பரம காருண்யரான இவர் வியாக்கினங்களை அருளும் போது தவறிப்போய்க்கூட முன்னோர் மொழியை (பூர்வாச்சாரியர் உரையை) குறைக்கண்ணேடு கண்டதில்லை. அவர்களின் வழியொற்றியே மேலும் அழகுபடுத்திச்சொன்னார்.

வைணவத்திலே ரஹஸ்ய அர்த்தங்களுக்கு திருக்கோஷ்டியூர் நம்பிகளையும், (இவரிடம் திருமந்திர அர்த்த விசேஷத்தைத் தெரிந்துகொள்ள 18 முறை நடந்தார் ஸ்ரீராமானுஜர்). திருவாய்மொழிப் பேருரைக்குத் திருமாலையாண்டானையும், ஸ்ரீராமாயணுர்த்தத்திற்கு பெரிய திருமலை நம்பிகளையும் சொல்வார்கள். ஆனால், இந்த மூன்று முக்கியப்பிரமாணங்களையும் லகுவாக எடுத்தாண்டு, வியாக்கியான உலகிற்கே சக்கரவர்த்தியாக விளங்கினவர் பெரியவாச்சான்பிள்ளை.

ஆழ்வார்களின் பாசுரங்களுக்கு விளக்கம் சொல்லும் போது, அந்தந்த ஆழ்வார்களே ஆசாரியரின் உள்ளிருந்து பேசினார்கள். இராமாயணுர்த்தம் சொல்லும்போது, வான்மீகி முனிவரின் அந்தராத்மாவே உள்ளிருந்து பேசியது. மற்ற ஆசாரியர்கள் எல்லாம் ஒரு சில வியாக்கினங்களே செய்தருளி இருக்கும் போது, இவர் நூற்றுக்கணக்கான நூல்களை இயற்றி, வைணவ உலகுககே ஓர் பேரொளியாய் இருநதார்.

இவரைப் பற்றி அற்புத ஸ்லோகம் ஒன்றிருககிறது.

"வ்யாஸோ வல்மீகஜந்மா
வா கருட: க்ருஷ்ண ஏவவா ॥
புதைரிதி விதர்க்யாய
ஸ்ரீக்ருஷ்ணுயாஸ்து மங்களம் ॥

இதன் பொருள்,

"இவர் வியாஸரோ? வால்மீகியோ? கருடனோ? க்ருஷ்ணன் தானேயோ? என்று ஞானிகளால் எண்ணப்படுகிற ஸ்ரீகிருஷ்ண ஸூரிக்கு மங்களமுண்டாகட்டும்" என்பதாகும்.

அன்றைக்கு வடமொழி வேதங்களைப் பிரித்தெடுத்து, சிக்கறுத்து, சின்னச் சின்ன ஸூத்ரங்களால் அவற்றின் உட்பொருளை விவரித்தார் க்ருஷ்ண த்வைபாயனர். தமிழ் வேதமாகிய நாலாயிரத் திவ்யப் பிரபந்தங்களுக்கு உட்பொருளை விவ

ரித்தார் ஸ்ரீகிருஷ்ண சூரியா கிய பெரியவாச்சான் பிள்ளை.

பின்னால் மணவாள மாமுனிகளின் திருவாய்மொழிப் பேருரையைக் கேட்டு அவருக்கு 'ஸ்ரீசைலேச தயா பாத்ரம்' தனியனை சன்மானமாகக் கொடுத்த நம்பெருமாள், இவருடைய வியாக்கினங்களைக் கேட்டு 'அபயப்ரத ராஜர்' என்ற சிறப்புப் பெயரை அளித்தார்.

உபதேச ரத்னமாலையில் இவரைப் பற்றி மணவாள மாமுனிகள் பேசுவார் இப்படி!

"பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ள
வைக்கும்
தெரிய வியாக்கியைகள்
செய்வால் - அரிய
அருளிச் செயற்பொருளை
யாரியர்கட் கிப்போது
அருளிச் செயலாய்த் தறித்து"

(உ.ர. மாலை 46)

பெரியவாச்சான் பிள்ளையின் பேரருளால் அன்றே பின் வந்த ஆசார்யர்கள் அனைவரும் மிக எளிதாக அருளிச்செய்த பொருளை நிர்வகிக்க முடிந்தது.

ஆசார்யன் அருள் இருந்தால் போதும், கல்லாதவர் கூட கற்றவர் ஆவார் என்பதற்கும், ஆசார்யர் என்பவர் பரம கருணை உடையவராக விளங்குகிறார் என்பதற்கும் இவர் வாழ்வில் நடந்த ஓர் சம்பவம் விளக்குகிறது.

பெரியவாச்சான் பிள்ளைக்குத் திருமடைப்பள்ளி கைங்கர்யம் செய்து வந்தார் ஓர் அன்பர். அவருக்கு கல்வியறிவு கிடையாது.

ஒருமுறை சில பண்டிதர்கள் பெரியவாச்சான் பிள்ளையைக் காண வந்திருந்தார்கள். அவர்கள் ஓர் இடத்தில் அமர்ந்து தாங்கள் கையில் வைத்திருந்த நூல்களைக்காட்டி ஏதேதோ பேசிக்கொண்டிருந்தார்கள்.

கையில் ஓலைச் சுவடிக்கட்டு பார்த்த திருமடைப்பள்ளி அன்பர் ஆவலுடன் அவர்களிடம் "அது என்ன நூல் கையில் வைத்திருக்கிறீர்கள்?" எனக்கேட்டார்.

இவர் கல்வியறிவு அற்றவர் என்பதைக்கண்ட அவர்கள், அந்த நூலின் பெயரைச் சொன்னாலும், இவருக்கு எங்கே புரிய போகிறது என்கிற எண்ணத்தில், கேலியாக "முசலகிஸலயம்" என்று சொன்னார்கள்.

அதுதான் அந்த நூலின் பெயர் போலும் என்று எண்ணி மௌனமாக இருந்துவிட்டார் இவர்.

முஸலகிஸலியம் என்றால் உலக்கைக்கொழுந்து என்று பொருள். பெரியவாச்சான் பிள்ளை வந்ததும், "நான் அவர்களிடம் கையில் வைத்திருந்த கிரந்தத்தைக் கேட்ட போது முசலகிஸலயம் என்றார்களே, அதையார் அருளிச்செய்தது?" என்று அப்பாவித்தனமாகக் கேட்டார்.

படித்த அந்தப் பண்டிதர்கள் படிக்காத இந்த அப்பாவியை உலக்கைக்கொழுந்து என்று கேலி செய்திருப்பதை அறிந்து வருத்தமுற்ற பெரியவாச்சான்பிள்ளை, அதே பெயரில் ஓர் நூலை இயற்றுமளவிற்கு இவரைச் செய்துவிட வேண்டும் என்று உறுதி கொண்டார்.

அவரை அன்போடு அணைத்து, பல்வேறு இலக்கிய இலக்கணங்களையும், உபயவேதங்கள் ஸகல சாஸ்திரங்கள் என அனைத்தையும் பயிற்றுவித்து மிகச் சீக்கிரமே அவரைப் பண்டிதராக்கினார்.

வாதிகேஸரி ஜீயர் என்று புகழப்படும் அந்தச் சீடர் 'முஸலகிஸலயம்' என்ற பெயரில் ஓர் கிரந்தம் செய்தார். தன்னை பரிகஸித்த வித்வான்களிடமே காண்பித்து அவர்கள் நாணும் படிச் செய்தார்.

இதனை அவரே தம்முடைய 'தத்வ நிரூபணம்' என்ற நூலில் சொல்கிறார்.

"அபயப்ரத நாமாநம் அஸ்மத்
குருமஹம் பஜே !
யத்கடாக்ஷாதயம் ஜந்து:
அபுநர் ஜந்மதாம் கத ॥

தன்னை ஒன்றுமறியாத ஜந்து என்கிறார். எவருடைய திருவடி கடாக்ஷத்தால் பிறவாமை பெற்றேனோ அந்த ஆசார்யரான அபயப்ரதராஜரின் திருவடியை வணங்குகிறேன் என்று தன் நன்றியறிதலை மேற்படி சுலோகத்தில் தெரிவிக்கிறார்.

தொண்ணூற்றைம்பது திருநக்ஷத்திரம் எழுந்தருளியிருந்த பெரியவாச்சானின் பிரபாவம் வைணவ உலகிற்கு ஒரு சர்க்கரைப் பொங்கல்!



(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## ஏழாம் அத்தியாயம்

## ஞான விக்ஞான யோகம்

### பகவான் சொன்னது

பலம் பலவதாமஸ்மி காமராக
விவர்ஜிதம் ।
தர்மாவிருத்தோ பூதேஷு காமோ
அஸ்மி பரதர்ஷப ॥ (11)

"பரதத்தலைவனே! பலசாலிகளிடம் காமம், ராகம் நீக்கப்பட்ட ஆற்றலாக நான் உள்ளேன். மற்றைய உயிர்களிடத்து அறத்திற்கு உட்பட்ட காமமாக உள்ளேன்."

[கண்களுக்குத் தெரியாத பொருள்களிடத்து ஆசை கொண்டால் அது காமம். அதாவது நினைத்தாலே அனுபவிக்கத்தூண்டும் உணர்வானது காமமாகும். ஒரு பொருளைக் கண்ணுல்கண்ட பின்பு அதனை அடைய நினைக்கும் எண்ணம் ராகமாகும். ஒருவன் தன்னிடம் அடைந்திருக்கும் ஆற்றலை நலம் தருபவற்றிற்கே பயன்படுத்த வேண்டும். சிற்றின்பங்களுக்காக, உலகாயுத ஆசைகளுக்காகப் பயன்படும் ஆற்றலுக்கு மதிப்பில்லை. எந்தவிதப் பற்றுமின்றிப் பயன்படுத்தப்படும் ஒருவனது திறமை, ஆற்றல் போகப்போக மேலும் வலிமை யுடையதாகிறது. ஒருவன் தன் ஆற்றலை மனித வாழ்க்கைக்குப் பயன்படும் வகையில் பயன்படுத்திக்கொண்டால், அதில் குற்றமில்லை. உணவே வாழ்வில்லை. பசியைப்போககுவதற்கு மட்டுமே உணவு. அப்போது எந்த உணவின் மீது பற்று ஆசை ஏற்பட்டால் அது தவறில்லை. இதைத்தான் ஞானிகளும், முனிவர்களும் தங்கள் வாழ்க்கையில் மேற்கொள்கின்றனர்.]

யே சைவ ஸாத்விகாபாவா ராஜஸாஸ்
தாமஸாஸ்ச யே ।
மத்த ஏவேதி தான்வித்தி ந
த்வஹம் தேஷு தே மயி ॥ (12)

"சத்வ, ரஜோ, தமோ குணங்களால் உண்டாகிய எல்லா பொருள்களும் என்னிடத்திலிருந்துதான் பிறக்கின்றன என்பதை அறிவாயாக! ஆனால் அதே நேரத்து நான் அவற்றின் மீது ஆதாரப்படவில்லை. அவைதாம் என்மீது ஆதாரப்பட்டிருக்கின்றன."

[உலகமானது முக்குண இயல்புகளைக் கொண்டது. ஆனால் இந்த உலகத்தைப் படைத்த இறைவனோ இக்குணங்களுக்கு அப்பாற்பட்டவன். ஒரு கயிற்றைப் பார்த்து பாம்பு என்று சொல்கிறோம். பாம்பாக நமக்கு தெரிவது மாயையினால்தான். அதுபோன்று இறைவன் உலகமாகத் தோற்றமளிக்கிறான்.]

த்ரிபிர்குணமயைர் பாவைரேபி:
ஸர்வமிதம் ஜகத் ।
மோஹிதம் நாபிஜானாதி மாமேப்ய:
பரமவ்யயம் ॥ (13)

"இந்த மூன்று குணங்களால் ஆக்கப்பட்ட பொருள்களின் ஆசையால் இந்த உலகம் மயங்கி நிற்கின்றது. அதே சமயத்து இந்தப் பொருள்களைக் காட்டிலும் மேலான, அழியாத என்னை (இந்த உலகம்) அறியவில்லை."

[சினிமாப்படம் பார்க்கும் ஒருவன், திரையில் தெரியும் நிகழ்ச்சிகளில் ஒன்றிப் போய் விடுகிறான். அதுபோது நிழற் படங்களைத் தாங்கி நிற்கும் திரையினை அவன் மறந்து விடுகின்றான். ஆனால் திரை இல்லை என்றால் படம் இல்லை. அதுபோன்று இறைவனால் படைக்கப்பட்ட பொருள்களைத் தன் முக்குண பேதங்களால் அனுபவிக்கின்றார்கள். அதில் மயங்கிப் போகின்றார்கள். ஆனால் நகரும், நகரா பொருளில் எங்கும் எப்பொழுதும் நிறைந்துள்ள இறைவனை மனிதன் நினைப்பதில்லை.]

தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா
துரத்யயா।
மாமேவ யே ப்ரபத்யந்தே
மாயாமேதாம் தரந்தி தே॥ (14)

"முக்குணங்களால் உண்டாக்கப்பட்ட இந்த தெய்வ மாயையிலிருந்து உண்மையில் (எவராலும்) விடுபடமுடியாது. (ஆனால்), என்னையே இறுதிப் புகலிடமாக யார் சரணடைகின்றார்களோ, அவர்கள் இந்த மாயையிலிருந்து விடுபடலாம்."

[இந்த மாயத் தோற்றத்தை இறைவன் தன் உடம்பாகக் கொண்டு விளங்குகின்றான். மாயையானது இறைவனது விளையாட்டாகும். விஷ்ணுவுக்கு மகாமாயன் என்று பெயர். அந்த மாயையினால்தான் அவன் செயற்கரி

யச் செயல்களைச் செய்தான. அந்த மாயவனை உள்ளபடி அறிந்து, அவன் திருவடிகளைச் சரண்புகுந்தால் அவன் தன் உண்மை உருவத்தைக் காட்டு வான். அதுபோது மனிதன் உலகப்பற்று எனும் மாயையிலி ருந்து விடுபடுவான்.]

*ந மாம் துஷ்க்ருதினோ மூடா:*
*ப்ரபத்யந்தே நராதமா: ।*
*மாயயாபஹ்ருதஞானா ஆஸுரம்*
*பாவமாச்ரிதா: ॥ (15)*

"பாவமான செயல்களைச் செய் பவர்கள், முட்டாள்கள், மக்களில் கீழான குணத்தை உடையவர் கள், மாயையினால் உண்மை யான அறிவை இழந்தவர்கள், அரக்க இயல்பை கொண்ட வர்கள் போன்றோர் என்னைப் புகழ்வதில்லை."

[உயர்ந்த குணமும் பண்பும் உடையவர்கள் தேவர்களாகக் கருதப்படுவர். அதே நேரத்து பிற உயிர்களைத் துன்புறுத்து பவர்களும், எப்போதும் உள்ளத் தில் கள்ளமும், கபடமும் கொண் டிருப்பவர்களும் அசுரர் என்று அழைக்கப்படுவர். எப்போது, எல்லாம் இறைவன், எங் கும் இறைவன் இருக்கின்றான் என்ற பேருண்மையை மறக்கின் றனோ அவனிடம் மூடத் தன்மை குடிபுகுகின்றது. அறி யாமை மிகுந்தவர்கள் இறுதி யில் ஆழிவைத்தான் அணைப் பார்கள். இந்த அறியா மையானது ஆசை, காமம் எனும் மாயையினால் பிறக் கிறது. இந்த அறியாமையி னால் இறைவனையும், இறை நம்பிக்கையாளர்களையும் தூற் றுகின்ற இழிநிலையை அடை கின்றனர்.]

***சதுர்வித பஜந்தே மாம்ஜனா:***
***ஸுக்ருதினோ அர்ஜுன***

*ஆர்தோ ஜிக்ஞாஸுரர்த்தார்த்தீ*
*ஞானீ ச பரதர்ஷப ॥ (16)*

"பரத குலத்தில் தோன் றிய பெருமகனாகிய அர்ச் சுனா! துன்பத்தை அனு பவிப்பவன், ஞானத்தின்மேல் ஆசை உடையவன், பொருளால் வரும் இன்பத்தைத் தேடுபவன், ஞானி ஆகிய நான்குவகை யான அறச்செயலைச் செய்ப வர்கள் என்னை வணங்குகின் றனர்."

[கடவுள் இல்லை என்பவன் கூட துன்பத்தில் அவதியுறும் போது அவனையும் மீறி இறை வனை நினைக்கின்றான். அந்த நினைப்பே அவனுக்கு நன் மைகள் உண்டாக்குகின்றது இறை நம்பிக்கை ஒருவனுக்கு தக்க சமயத்தில் உதவிடும். திரௌபதி தன் மானத்திற்கா கவும், யானை தன் உயிருக்கா கவும் கண்ணனை அழைத்தது இவ்வகையில்தாம். அந்த இறை வனைப்பற்றி அறிய வேண் டும் என்ற ஆசை, தீராத வேட்கை உடையவர்கள் "ஜிக் ஞாசு" என்று அழைக்கப் படுகிறார்கள். விவேகானந் தர் போன்ற எத்தனையோ இறைமனிதர்கள் ஜிக்ஞாசுக ளாவர். இறைவனை அறிய வேண்டும் என்ற ஆசையா னது, பிறவியிலேயே ஒருவ னுக்கு அமையாது. அவ்வா சையினை வளர்த்துக்கொள்ளும் மன இயல்பினை பெறுதல் அவ சியம். பிறகு அர்த்தார்த்தீ என்ற சொல் ஒன்று வருகின் றது. அதாவது பொருள்மீது அதிக ஆசை உடையவன் என் பதாகும். இப்பிறவியில் தான் மகிழ்ச்சியாக வாழ, அதற்குத் தேவையான செல்வத்தைப்பெற ஒருவன் இறைவனை நாடுகின் றான். எப்போது இறைவன் மீது நம்பிக்கை வைத்து, தன் ஆசையைத் தீர்த்துக்கொள்ள நினைக்கின்றானோ, அவனும் சிறந்த பக்தனாகின்றான். நான் காவதாகக் குறிக்கப்படுபவர் ஞானிகளாவர். இவர்கள் பிற வியிலேயே இறை உணர்வோடு விளங்குவர். இறைவனைத்தவிர வேறொரு சிந்தனையும் அவர்



களிடம் இருக்காது. ஆக இந்த நான்கு வகையானவர் களும இறைவனோடு, இறை நினைப்போடு நேரடியாகவும், மறைமுகமாகவும் உறவு கொண் டவர்கள். அதனால்தான் அவர் கள் அறச்செயலாளர்கள் என்று அழைக்கப்படுகின்றனர்.]

*தேஷாம் ஞானீ நித்யயுக்த*
*ஏகபக்திர்விசிஷ்யதே ।*
*ப்ரியோ ஹி ஞானினோ அத்யர்த்த-*
*மஹம் ஸ ச மம ப்ரிய: ॥ (17)*

"(முன் செய்யுளில் சொன்ன நான்குவகையான அறச்செயல் கள் செய்பவர்களான) அவர்க ளில் தொடர்ந்து யோகம் மேற் கொண்டு சற்றும் மாறுபடாத பக்தி செய்யும் ஞானியானவன் மேலாவன். ஏனெனின் அத் தகு ஞானிக்கு நான் மிகவும் விருப்பம் உடையவன். எனக் கும் அவன் மிகவும் பிடித்தமா னவன்."

[சாதாரண மனிதன் முதலில் தனக்குத்தான் முதலிடம் தரு கின்றான். தான் மற்றைய உயிர்களைக் காட்டிலும் சிறந்த வன் என்ற மனப்பாங்கு கொண் டவன் மனிதன். ஆனால், தான் இவ்வுலகில் வாழ்வதற்கு அந்த இறைவன்தான் காரணம், தன் உயிர்க்கு அந்த கட வுள்தான் உயிர் என்ற பேருண் மையை உணரும் போது, உயர் அறிவை பெறும் போது, மனி தன் ஞானி எனும் நிலைக்கு உயருகின்றான். இந்த ஞான உறவே இறைவன் - மனிதன் உறவைப் பலப்படுத்துகின்றது.]

*உதாரா: ஸர்வ ஏவைதே*
*ஞானீத்வாத்மைவ மே மதம் ।*
*ஆஸ்தித: ஸ ஹி யுக்தாத்மா*
*மாமேவானுத்தமாம் கதிம் ॥ (18)*

"(16-ஆம் செய்யுளில் சொல்லப்பட்ட) இவர்கள் யாவரும்ே நல்லவர்கள்தான். ஆனாலும், ஞானியை என் ஆத்மாவின் உரு வமாகக் கருதுகிறேன். ஏனென் றால் யோகத்தில் நிலை பெற் றவனாகிய அவன் மிக உயர்ந்த கதியாக விளங்கும் என்னையே சார்ந்திருக்கிறான்."

[இறைவனைத் தொழும் எவ ருமே பக்தர்கள்தாம். ஆனால் அவர்கள் பக்தியில் உலகா யுத ஆசைகளின் எதிர்பார்ப்பு கள் அடங்கியிருக்கும். ஆனால் ஞானியின் பக்தி எல்லா வகை யிலும் உயர்ந்தது. தனித் தன்மை வாய்ந்தது. அவர் தம் பக்தி உலக நலத்தையும் தாண்டி, ஆத்ம நலத்தின் மேல் ஓங்கியிருக்கும். அதுபோது அந்த ஞானி இறைவனுக்கு நெருங்கிய உறவாகின்றான்.]

*பஹூனாம் ஜன்மனாமந்தே*
*ஞானவான்மாம் ப்ரபத்யதே ।*
*வாஸுதேவ: ஸர்வமிதி ஸ*
*மஹாத்மா ஸுதுர்லப: ॥ (19)*

"பல பிறப்புகளைக் கடந்த பிற குதான் ஞானியானவன் 'எல் லாம் அந்த இறைவனின் (வாசு தேவனின்) உருவமே' என்று அறிந்து வழிபட்டு என்னை அடைகின்றான். அதுபோன்ற உயர்ந்த ஆத்மா (உயர்ந்த பக் தன்) கிடைப்பது அவ்வளவு எளிதல்ல."

[இச்செய்யுளில் 'வாசுதேவ' எனும் சொல் வருகிறது. அதற் குப் பொருள் எல்லாவற்றி னுள்ளும் இருப்பவன் என்பதா கும். எல்லாவற்றிலும் என்பது நகரும், நகரா பொருள்கள் நல்லவர் கெட்டவர் ஆகியோர் அடங்கியது ஆகும். ஞானி என்பவன் எது உண்மையான பெற்றவனாகிறியும் அறிவைப் வைப்பெற்ற பிறகு அறி ஞானியானவன் பாரக்கும் எந் தப் பொருளிடத்தும் அவன் இறைஉருவத்தையே, எதனை யும் இறைவனாகவே காணுகின் றான். அந்த உயர்ந்த நிலை யினை அடைந்ததும் அவன் தனக்கும், பிற உயிர்களுக் கும் நல்லன செய்யும்நல்லதைக் கற்பிக்கும் ஒரு வழிகாட்டியாக விளங்குகிறான். அதுபோது அவன் பிறவி ஒரு அரிதான பிறவியாக மற்றவர்களிடையே திகழ்கின்றது.]

*காமைஸ்தைஸ் தைர்ஹ்ருதஞானா:*
*ப்ரபத்யந்தே அன்ய தேவதா:*
*தம் தம் நியமமாஸ்தாய ப்ரக்ருத்யா*
*நியதா: ஸ்வயா ॥ (20)*

"பலவகையான ஆசைகளின காரணமாக அறிவை இழந் தவர்கள், அவரவர்களுடைய இயற்கை உணர்வுகளினால் இழுக்கப்பட்டு, அந்த உணர வுகளுக்கு ஏற்றவாறு வழிமு றைகளை மேற்கொண்டு மற் றைய கடவுளர்களை வழிபடு கின்றனர்."

[பல அரசு அலுவலர்கள் பல அமைச்சர்கள் யாவரும் முதலமைச்சர்களுக்குக் கீழ்தான் செயல்படுவார்கள். அதுபோது, தங்களுடைய சிறு சிறு தேவை களை விருப்பங்களை நிறை வேற்றிக்கொள்ள பலர், இந்த அலுவலர்களையும், அமைச்சர் களையும் நாடிப் பயன்பெ றுவர். முதலமைச்சரை ஒருவர் நாடுகின்றார் என்றால், அவரது தேவை, விருப்பம், எதிர்பார்க் கப்படும் பயன் அதிகமானதாக

மேன்மையானதொன்ருக இருக்கும். ஆனால் ...னறு முதளைச் சந்ரி சந்திப்பது என்பது அவ்வளவு எளிதல்ல. இதனை நாம் நம் அன்ருட வாழ்க்கையில் பார்க்கலாம். இந்தக் கண்ணேட்டத்தில்தான் நாம் இச் செய்யுளின் கருத்தைப் பார்க்க வேண்டும். தமது மனதில் எழும் சிறு சிறு ஆசைகளை நிறைவேற்றிக்கொள்ள ஒருவன் சிறு சிறு தெய்வங்களை வழிபடலாம். ஆனால் முக்தி எனும் அரிய பலனைப்பெற வேண்டுமென்ருல் அவன் மேலான அந்தப் பரம்பொருளைத்தான் வழிபடவேண்டும். ஆனால் அவனை நெருங்குவது என்பது அவ்வளவு எளிதல்ல. தீவிரமான, நேர்மையான முயற்சியும், பயிற்சியும் தேவை. ஆகவே, ஆசைகள், எதிர்பார்புகள் சிறியனவாக இருப்பின் வழிபடும் தெய்வங்கள் பலவாகின்றன. வழிபடும் முறைகள் பலவாகின்றன.]

(தொடரும்)



ஸ்ரீ கச்சபேஸ்வரர் திருக்கோயில்
காஞ்சிபுரம்

## திருமலை நாதர்!

**இராம. இலக்குமிபதி - கோவை**

கல்லினுள் தேரை மற்றும் கு...ளே கோடி ஜீவன்
செல்கின்ற காலத்தோடு செகத்திலே வாழ வைத்தாய்!
கல்வியின் பயனே உந்தன் கழலடி பணிவதன்ரே
தொல்லைகள் தீர்த்தருள்வாய் திருமலை வாழும் மாலே!

கழுகின வரசனுக்குக் கதிமோட்சம் தந்தாய் நீயே!
அழுகுரல் தந்த யானைக் கடைக்கலம் தந்தாய் மாலே!
எழுகின்ற ஞாயிறே போல் ஒளிமுக மண்டலத்தோய்
தொழுகிறேன் உந்தன்பாதம் திருமலை மேவும் தேவே!

மூவாசை ஒழித்து விட்டால் முக்தியின் பாதை தோன்றும்
நாவால் நின்நாமம் பாடி ஞானியர் போற்றி நிற்பர்,
பாவாலிசை பாடி பக்தர் பரவசமாகி நிற்பர்,
தேவாதி தேவனாம் நீ, திருமலை மேவும் தேவே!

கீதையாம் வேதம் தந்து கிளர்வுறும் மானிடர்க்கே
பாதையும் தந்து வாழ்வில் பயனுடன் வாழச்செய்தாய்!
தாதையின் சொல்லைக் காத்துத் தரணியை தம்பிக்கீந்த
மேதையே இராமா உந்தன் மலரடி போற்றி, போற்றி!

மழலையர் சிரிப்பில் உந்தன் மலர்முகம் தோன்றுதையா!
நிழல்தரு தருக்களின்கீழ் திருவடி நீழல் கண்டேன்
அழகிய ஆசலத்தில் அனைவரைக் காக்குமுந்தன்
கழலடி பணிந்து நின்றேன் கருணையின்கடலே போற்றி!

ஆழியை கரத்தி லேந்தி அகிலத்தை காத்து நின்ருய்!
ஊழிகள் தோறும் உந்தன் உற்பவம் தோன்றுதையா!
ஆழியை கடைந்தே அமரர்க்கமுதினைத்தந்த மாலே!
வாழிநின்பாதம் என்று வாழ்த்தியே வணங்கி நின்றேன்!

இருக்கவோர் இடமுமில்லை, எடுக்கவோர் பொருளும் இல்லை
தருக்களின் நிழலேநின் தாளெனக் கொண்டேன் மாலே!
செருக்கினை ஒழித்து உந்தன் சேவடி பணிந்து நின்றேன்
அருக்கனின் நிறத்தைக் கொண்ட அச்சுதா ஆட்கொள்வாயே!

அலைமகள் செல்விதன்னை ஆகத்தில் சேர்த்து வைத்தாய்!
கலைமகள் நாதன் தன்னை கமலத்தில் தோற்றுவித்தாய்!
மலைமகள் சக்தி தன்னை சோதரியாகக் கொண்டு
உலகங்கள் படைத்த உந்தன் பாதமே போற்றி! போற்றி!

நெஞ்சமோ திருவின் இல்லம், நிறமதோ கடலின் நீலம்
பஞ்சமா பூதமெல்லாம் படைத்தளித்தழித்து நின்ருய்!
பஞ்சமா வாயுதத்தால் பக்தரைக் காத்து நிற்கும்
அஞ்சன வண்ணு, எம்மை, ஆட்கொண்டருள்வாய் நீயே!

கண்களோ கமலப்பூக்கள்! கார்முகில் மேனிவண்ணம்!
தண் பொழில் மேவும் தென்றல் போன்றதோர் முறுவல் பூத்து
விண்ணுடன் மண்ணுமாகி தீயும் நீர் காற்றுமாகி
பண்ணுடன் இசையுமானாய்! பரமனே போற்றி! போற்றி!

# ஜோதிடம்

திரு. பராசரம் பாலசுப்பிரமணியம் - திருச்சானூர்.

ஜோதிடம் வேதாங்கம் என்று அழைக்கப்படுகிறது. வேத புருஷனுக்கு வ்யாகரணம் முகம்; ஜோதிடம் கண்கள்; நிருக்தம் காதுகள்; கல்பம் கைகள்; சிக்ஷை மூக்கு; சந்தஸ் கால்கள் என்று பாஸ்கர ஸித்தாந்தத்தில் வருணிக்கப்படுகிறது. எனவே ஜோதிடம் எப்பொழுது தோன்றியது என்றால் அது வேதத்துடன் தோன்றியது எனலாம். வேதம் எப்பொழுது தோன்றியது எனில், அது இறைவனுடன் தோன்றியது என்பர். இறைவனோ பிறப்பு - இறப்பு முதலும் முடிவும் இல்லாதவன். எனவே ஜோதிடம் வேதத்தைப் போன்று மிகப்பழைமையானது. மற்றும் வேதம் உள்ள வரை, ஜோதிடமும் நிலைத்து இருக்கும்.

வேதத்தைப்போன்று, ஜோதிடமும் மக்கள் உய்யும் பொருட்டு இறைவனால் அருளப்பட்டது. கலியுகம் பிறந்து இன்றைக்கு 5095 வருடங்கள் ஆகின்றன. இதற்கு முன்னர் துவாபரயுகம் 8 லட்சத்து 64 ஆயிரம் ஆண்டுகள் கொண்டு நடந்து முடிந்தது. துவாபரயுகத்திற்கு முன்னர் திரேதாயுகம் நடந்தது. அத்திரேதாயுகத்தில் தான் இராமாயணம் நடந்தது. எனவே இராமாயணம் நடந்த காலம் சுமார் 8,69,095 வருடங்களுக்கு முன்னர் எனலாம். இராமாயண காலத்திலேயே இந்த ஜோதிடம் மிகவும் சிறப்புற்று விளங்கியது. பாலகாண்டத்தில் புத்திர காமேஷ்டியாகத்தை நடத்துவதற்காக வசிஷ்டர, ருஷ்ய சிங்கர் போன்ற மகரிஷிகள் நன்னாளையும், நல்ல முகூர்த்தத்தையும் எடுத்துக் கூறுகிறார்கள். இதே பாலகாண்டம் பதினெட்டாவது சர்க்கத்தில் ஸ்ரீராமனின் ஜாதகத்தைத் தெரிவிக்கிறார் மகரிஷிவால்மீகி.

"ததஸ்ச த்வாதஸே மாஸே
சைத்ரே நாவமிகே திதௌ ।
நக்ஷத்ரே அதிதிதைவத்யே ஸ்வோச்ச
ஸம்ஸ்த்தேஷு பஞ்சஸு ।

க்ரஹேஷு கர்க்கடே லக்நே
வாக்பதா விந்துநா ஸஹ ।
ப்ரோத்யமாநே ஜகந்நாதம்
ஸர்வலோக நமஸ்கிருதம்
கௌஸல்யா(அ)ஜநயத்ராமம்
ஸர்வலக்ஷண ஸம்யுதம் ।

இதனையே கம்பரும் வெகு அழகாகக்கூறுகிறார்.

"ஆயிடைப் பருவம் வந்து
அடைந்த
எல்லையின் மாயிருபுவிமகள்
மகிழ்வின் ஓங்கிட
வேய்புனர்பூசமும்
விண்ணுளோர் புகழ்
தூயகர்க் கடகமும் எழுந்து
துள்ளவே"

விவாக காலத்தில் நன்னாளையும் லக்னம் முதலியவற்றை நாம் பார்ப்பது போலவே, சீதாபிராட்டியின் விவாக காலத்திலும், பங்குனிமாதத்து உத்திர நட்சத்திரத்தை மிகச் சிறந்ததாக வசிஷ்டர், விசுவாமித்திரர், சதானந்தர் முதலான மகரிஷிகள் எடுததுக்கூறி சீதாராம விவாகததை நன்கு நடத்தி வைத்தனர என்று இராமாயணத்தில் அறிகிறோம்.

யுத்த காண்டத்திலும ஸ்ரீராமன் ஹனுமான் வாயிலாக இலங்கையின் செய்தியை அறிந்து, சுக்ரீவனை நோக்கி, "இன்றே நாம் யுத்தத்திற்குக் கிளம்பவேண்டும். ஏனெனில் சுற்றுப்புறத்தில் நல்ல சகுனங்களுடன், மனதும் கலக்கமற்று இருக்கிறது, என்று கூறுவதுடன் "இன்று உத்திர நட்சத்திரம் அது எனக்கு வெற்றியைக் கொடுக்கும் சாதக தாராவாகும்" என்றும் கூறுகிறார்.

மகாபாரதத்திலும் ஜோதிடத்தின் சிறப்பு நன்கு விளஙகுகிறது. பாண்டவர்களுள் இளையவனான சகாதேவன் ஜோதிட சாஸ்த்திரத்தில் சிறந்து விளங்கினார் என்பதை அறிகிறோம். மேலும் ஜராசந்தன், பகாசுரன், கீசகன், துரியோதனன் மற்றும் பீமன் இவர்கள் யாவரும் ஒரே நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் என்றும், பீமனைத் தவிர்த்து மற்றவர்கள் உயிர் வாழ்ந்தால் அது நாட்டிற்கு ஆபத்து எனக்கருதி கண்ணபிரான், பீமனின் கையில் மற்ற நால்வரும் இறக்கும்படிச் செய்கிறார்.

கிரகங்களின் சஞ்சாரம் பற்றியும், நட்சத்திரத்தின் இயக்கம்

பற்றியும் தெளிவாக அறிந்து அதன் பலாபலன்களை உணர்ந் தவராகச் சங்ககாலத் தமிழ்ப் புலவர்கள் இருந்தனர் என்பதை பழைய தமிழ் இலக்கியங்கள் பலவற்றிலும் காண்கிறோம்.

**"மைம்மீன் புகையினும்**
**தூமம் தோன்றிடினும்**
**தென்திசை மருங்கின்**
**வெள்ளி ஓடினும்"**
*முந்நீர்நாப்பண்திமில்சுடர்போலச்*
**செம்மீன் இமைக்கும்**

(மைம்மீன் என்பது சனி, தூமம்-தூமகேது, மீன்படகின் விளக்கு போல் வான் நடுவே செவ்வாய் விளங்கும்.)

**............வெள்ளியது நிலையே"**

அதாவது சுக்ரனது மாறுபட்ட நிலையால் வாழ்க்கைமாறும்.

**"வெள்ளி தென்புலத்து உறைய**
**விளைவயல் பள்ளம் வாடிய**
**பயன் இல்காலை"**

சுக்ரன் தென் திசையில் காணப் பட்டால் நாட்டில் மழை கிடை யாது.

இவை போன்ற கிரகங்களின் நிலையைப் பற்றிய பலாபலன் களைக் கொண்ட பல பாடல் கள் புறநானூற்றில் காண்கி றோம்.

பதிற்றுப்பத்தில் கீழ்வரும் அடிகள் காணப்படுகின்றன.

**"நாள் கோள் திங்கள் ஞாயிறு**
**கணையழல்**
**ஐந்தொருங்கு புணர்ந்த**
**விளக்கத்தனைய....."**

பட்டினப்பாலையில் , ஜோதிடம் பற்றிய வரிகள் கீழே கொடுக் கப்பட்டுள்ளது.

**நீணிற விசும்பின் வலனேர்புதிரிதரு**
**நாண்மீன் விராய கோண்மீன்போல".**

**வானத்தில் காணப்படுகின்ற எண்ணற்ற விண்மீன்களில் எரி** நட்சத்திரங்களுமுண்டு. அது பூமியில் விழுவதை நாம் பார்த் திருக்கிறோம். அப்படி அந்த எரிநட்சத்திரம் பூமியில் விழும் நேரத்தையும், லக்னத்தையும் கோள் நிலைகளையும் கணக் கிட்டுப் பலன் கூறுவார் கள். அந்த எரிநட்சத்திரம் எந்த தேசத்தில் விழுகிறதோ, அந்நாட்டு அரசன் அன்றுமு தல் ஏழுநாட்களில் இறப்பான் என ஜோதிட சாஸ்திரம் கூறு கிறது.

சேரநாட்டை கோச்சேரமான் யானைகட்சேஎய் மாந்தரஞ்சே ரன் இரும்பொறை என்னும் புகழ்மிக்க மன்னன் ஆண்டுக் கொண்டிருந்தான். கூடலூர் கிழார் என்னும் பெரும் புலவர் அம்மன்னனின் நண்பர். ஒரு நாள் இரவு ஒரு எரிநட்சத்திரம் ஒளிப்பிழம்பாக பூமியில் விழு வதைக் கண்டார். திடுக்கிட் டார். அவர் தமிழ் புலவர் மட் டுமன்று. ஜோதிடம் அறிந்த வித்தகர். அவ்வெரிநட்சத்திரம் விழுந்த வேளையைக் கணக் கிட்டுப் பார்த்தார். மேஷராசி யில் கார்த்திகை நட்சத்திரத்து முதல் பாதத்தில் முன்னிரவுப் பொழுதில் முடப்பனைப்போல் இருக்கும் அனுஷம் நட்சத்திரம் கூடிய நாளின் தொடக்கத்தில், பங்குனி மாதத்தில் உத்திர நட் சத்திரம் பெயர்ந்தது. அதற்கு எட்டாவது நட்சத்திரமாகிய மூலம் எதிரிட்டு நிற்க அந்த உத் திர நட்சத்திற்கு முன் சொல்லப் பட்ட மிருகசீரிட நட்சத்திரத்து சஞ்சார வேளையில், அந்த எரி நட்சத்திரம் கிழக்கு வடக்கு எல்லைக்குள் பூமியில் விழுகி றது. அப்படி அந்த வேளையில் விழுந்த எரிநட்சத்திரத்தால் மன் னன் இரும்பொறை இன்னும் ஏழு நாட்களில் மரணம் அடை வான் என எண்ணி வருத்தமு றுகிறார். விதிப்பிரகாரம் ஏழாம் நாள் மன்னனின் மரணம் நேர்ந் தது. மன்னன் இறந்த பிறகு 'நான் பயந்து கொண்டிருந்தது போன்றே • நடந்து விட்டதே' என வருந்துகிறார். அப்பாடல் பின்வருமாறு. இதுவும் புறநா னூற்றுப்பாடல்,

**ஆடுஇயல்**' அழல்குட்டத்து
**ஆர்இருள் அரைஇரவில்**
முடப்பனையத்து **வேர்முதலாக்**
**கடைக்குளத்துக்கயம் காயப்**
**பங்குனி உயர் அழுவத்துத்**
**தலைநாள் மீன் நிலைதிரிய**

**தொல்நாள் மீன் துறைபடியப்**
**பாசிச்செல்லாது ஊசித்துன்னாது**
**அளக்கர்த்திணை விளக்காகக்**
**கனைஎரிபரப்பக்கால் எதிர்புபொங்கி**
**ஒருமீன் விழுந்தன்றால், விசும்பினானே.**

தமிழில் வழங்கிவரும் தொண் ணூற்றாறு வகைச் சிறு பிர பந்தங்களில் பரணியும் ஒன்று. கலங்கத்துப் பரணியை அறி யாதார் உண்டோ. போர்க் களத்தில் ஆயிரம் யானைக ளைக் கொன்ற தலைவனைப் புகழ்ந்து பாடுவது பரணி யாகும். இரணியவதைப் பரணி என்றொரு நூல் உண்டு. இதனை இயற்றிய ஆசிரியர் பெயரும், காலமும் அறியமு டியவில்லை. எனினும் இந்நூல் 13ம் நூற்றாண்டிற்கு முற்பட் டது என வரலாற்று ஆசி ரியர்கள் கருதுகிறார்கள். இந் தக்காலத்தில் ஜோதிடம் கணிப் பதும் நிமித்தம் பார்ப்பதும் நம் தமிழ்நாட்டில் வழக்கமாக இருந் தன. பன்னிரண்டு இராசி களில் ஒன்பது கிரகங்களைக் கணித்து, அவற்றுள் லக்னத் துக்கு பதினொன்றும் இடத்து

அதிபதியும், அவ்விடத்திலுள்ள கிரகமும் கெடுதல் செய்யாது என்று இரணியவதைப்பரணி ஆசிரியர் கூறுகிறார்.

"ஐயிரண்டு திங்களில்
நாலிரண்டும் ஒன்றும்
ஆறிரண்டிற் பதினொன்றே
அணைத்து நிற்கச்
செய்யவன்தேர் குணதிசையில்
உதயம் செய்யத்
திருமகனைக் கருவுயிர்த்தாள்
தேவி ஆங்கே......"

இதுபோன்று பல இலக்கிய நூல்களிலும் சதகம் என்னும் நூல்களிலும் ஜோதிடத்தைக் கையாண்டுள்ளனர். தமிழில் ஜோதிடத்திற்கென்றே பல நூல்கள் உள்ளன. அவற்றுள் சிறந்தது 'சாதக அலங்காரம்' என்பது. மேலும் நாடி ஜோதிட நூல்கள் பலவும் தமிழில் உள்ளன.

ஆரியபட்டர், பார்ஸ்கராச்சாரியார், ப்ரகுமுனிவர், விச்வாமித்திரர், வசிஷ்டர், ஜைமினி, கபிலர், பராசார், காஸ்யபர, வராஹமிஹிரர், பரத்வாஜர், கார்க்கி படோத்பலர், மந்த்ரேஸ்வரர், வைத்தியநாத தீட்சிதர் போன்ற பல ஜோதிட அறிஞர்கள் நம் நாட்டில் வாழ்ந்தனர். மகா கவி காளிதாசர் ''காலாம்ருதம்' மற்றும் 'உத்திரகாலாம்ருதம்' என்னும் நூல்களை இயற்றியதை யாவரும் அறிந்ததே. இவற்றுள் மகரிஷி ஜைமினியின் முறையானது மற்றவர்களின் முறைகளிலிருந்து வேறுபடுகிறது. வராஹமிஹிரரின் பிருஹத் ஜாதகம் என்னும் நூல் மிகவும் சிறப்பாக எல்லோராலும் போற்றப்படுகிறது. பிருஹத் ஜாதகம் அத்தியாயம் 28ல் உள்ள 9வது சுலோகத்தின் மூலம் வராஹமிஹிரரின் வரலாறு அறியமுடிகிறது.

"ஆதித்ய தாஸதனய:
தநவாப்தபோத
காபித்தகே ஸவித்ருலப்த
வரப்ரஸாத:
ஆவந்திகோ முனிமதான்
யவலோக்யஸம்யக்
ஹோராம் தராஹ மிஹிரோ
ருசிராம் சகாரா

இதன் பொருள்:- பிருஹத்ஜாதகத்தை இயற்றியவர் ஆதித்யதாஸர் என்பவரின் புத்திரன். அவரிடமிருந்தே கல்வி கற்றார். கபித்தகம் என்ற ஊரில் சூரியனை வழிபட்டு அவருடைய அருளைப்பெற்றவர். அவந்தீ தேசத்தில் பிறந்தவர். வராஹமிஹிரர் என்று அழைக்கப்படுவர். கபித்தகே என்னும் சொல்லால், இந்நூல் இயற்றிய காலத்தை அவர் நம்க்குத் தெரிவிக்கிறார். வடமொழியிலுள்ள கடபயாதி சங்கியாவின் படி பார்க்கும் பொழுது, கலி பிறந்து 1711-ம் வருடத்தில் இந் நூலை இயற்றியதாக, வராஹமிஹிரர் கூறுகிறார். விக்கிரமாதித்தன் அரசவையில் அனேக புலவர்கள், ஜோதிட வல்லுநர்கள் வாழ்ந்தார்கள். அவர்களுள் மிஹிரரும் ஒருவர்.

ஒருநாள் அரசனுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அரசன் தன் அவையிலுள்ள ஜோதிட விற்பன்னர்களிடம், தன் மகனின் எதிர்காலத்தை கணித்து உரைக்குமாறு வேண்டினான். எல்லோரும் கணித்தனர். மிஹிரர் ஆதித்தியனை வழிபடுவர் என்று முன்னரே கண்டோம். அவ்வாதித்யனின் அருளால் வாக்கு வன்மையும், ஞானதிருஷ்டியும் பெற்றவர். அவர் அச்சிறுவனின் ஜாதகத்தைக் கணித்துப் பார்த்ததில் அச்சிறுவன் ஒரு குறிப்பிட்ட வயதில் பன்றி போன்ற விலங்கினால் கொல்லப்படுவான் எனக் கண்டார். இதை எப்படி அரசனிடம் தெரிவிப்பது எனத்தயங்கினார். அரசன் மீண்டும் மீண்டும் வற்புறுத்தவே உண்மையைப் பகர்ந்தார். அரசன் மிஹிரரின் வாக்கு வண்மையையும், ஜோதிடப் புலமையையும் நன்கு அறிவான். எனவே மிகுந்த எச்சரிக்கையுடன் தன் குழந்தையைக் காப்பாற்றலானான். ஏழு அடுக்கு மாளிகை ஒன்றை ஏற்படுத்தி அதில் தன் மைந்தனைக் கொண்டு சேர்த்தான். சுற்றிலும் படிகட்டுகளிலும் காவலாளர்களைக் கண்காணித்து வரும் படிப் பணித்தான். மிஹிரர் குறிப்பிட்ட அந்நாளும் நேரமும் வந்தது. அரசன் தனது பணியாட்களிடமிருந்து தனது மைந்தனின் ஷேமத்தை அடிக்கடி அறியலானான். மிஹிரரைப் பார்த்து ஏளனமாகச் சிரித்தான். ஆனால் மிஹிரர்,அரசனின் மைந்தன் இறந்துவிட்டாீன் என உறுதியாகக் கூறினார். அரசன் தனது உதவியாளர்களுடன் மேல் மாடிக்குச் சென்றான். அங்கே அவனது மகன் இரத்தவெள்ளத்தில் உயிரிழந்து கிடந்தான். சரியாக முடிக்கப்படாமல் விடப்பட்ட ஒரு தூணின் மீதுள்ள வராஹம் (பன்றி) உருவம் பொறித்துள்ள கல் அவனது மகனைக் கொன்றது என்பதைப் பின்னர் அறிந்தார். மிஹிரரின் திறமையைப் பாராட்டி அவருக்கு தனது அரசச் சின்னமான 'வராஹம்' விருது வழங்கினான். அன்றுமுதல் மிஹிரர் வராஹமிஹிரர் என அழைக்கப்படலானார். ஜோதிடத்தின் பெருமையை அன்றிலிருந்து உலகம் உணர ஆரம்பித்தது.

## மேலைநாட்டில் ஜோதிடம்

கி.மு. 3769 ஆண்டில்தான் முதல் சிறந்த ஜோதிடர் வாழ்ந்தார் என மேலை நாடுகளில் நம்பப்படுகிறது. அரேபியா, எகிப்து, பெரஸியா போன்ற நாடுகளில் அவரவர் மொழியில் ஜோதிட நூல்கள் உள்ளன. ஆங்கிலேயர்களின் அருங்கலையகத்தில் உள்ள சான்றுகளினால் கிரேக்கர்கள், எகிப்தியர்கள், பெர்

ஸியர்கள் போன்றோரும் இக்க லையில் சிறந்து விளங்கினர் எனப்புலப்படுகிறது. பெர் ஷிய அரசவையிலுள்ள ஒரு ஜோதிடப் புலவர் முகம்மது வின் பிறப்பை முன்னதாகவே அறிவித்தார் என அறிகிறோம். அலேக்ஸாண்டர் தன் அவை யிலுள்ள ஜோதிட விற்பன் னரான காலிஸ்தானிஸ் என் பவரைக் கலந்து ஆலோசித் தப் பின்னரே படை எடுப் பார் எனச் சரித்திரம் பகர் கிறது. தாலமி, கலிலீயோ, நியூட்டன், பைதாகரஸ் போன் றவர்கள் வான சாஸ்திரத் தில் சிறந்து விளங்கியவர் கள் என நாம் அறிவோம். ஜோதிடம் என்னும் விஞ்ஞானம் பல கிளைகளைக் கொண்டது. அவை பின்வருமாறு:

## 1. மருத்துவ ஜோதிடம் (Medical Astrology)

நோயற்ற வாழ்வே குறைவற் றச் செல்வம். இதையே ஆங்கி லத்தில் (Health is Wealth) என் பர். கடவுள் ஒரு மனித னுக்குச் செல்வத்தையும் விதிப் படி அவன் அநுபவிக்கவேண் டிய வியாதியையும் வழங்கு கிறார். எனவே மனிதர்க ளின் மிக முக்கியமான பிரச் சினை என்னவென்றால் நல்ல ஆரோக்கியமாக வாழ வேண்டும் என்பதே. நோய்வாய்ப்படும்பொ ழுது மருத்துவரைக் கலந்து அவர் கூறியபடி மருந்து உட் கொள்ளுவது, பத்தியம் இருப் பது போன்ற வழிகளில் வியா தியைப் போக்க முயற்சிக் கிறான். உயிரைப் பலிக் கொள்ளும் எய்ட்ஸ் போன்ற வியாதிகளுக்கு இன்னமும் சரி யான மருந்துகள் கண்டுபிடிக் கப்படவில்லை என அறிகிறோம். வியாதி இன்னதெனச் சரியாக அறிய முடியாமல், பலவித பரி சோதனைகளைச் செய்தும், பல வித மருந்துகளைக் கொடுத் தும், எத்தனையோ மனிதர்கள் வருந்துகிறார்கள். தவிக்கிறார் கள். முன்பிருந்த மன அமை தியும் கெட்டு மிகவும் துன்பப் படுகிறார்கள். ஆனால் ஜோதிட விஞ்ஞானமானது, ஒருவனது ஜாதகத்திலுள்ள கோள் நிலை களையும் நடந்துக் கொண் டிருக்கும் தசை புக்தியினையும் ஆராய்ந்து இந்த இடத்தில் இன்னவியாதி உள்ளது என் றும் அது அவரது ஆயுளுக் குள் அல்லது குறுகிய கால கட்டத்திற்குள் தீருமா - தீராதா என்றும், அவ்வியாதி எந்த கிர கக் கோளாறினால் ஏற்பட்டது என்று அறிந்து அதற்குண்டான சாந்தி ஹோமம் பரிகாரங்களை யும் கூறி மனிதனுக்கு நல்வாழ் வையும் மனச் சாந்தியையும் அளிக்கிறது.

## 1. வானஇயல் ஜோதிடம் (Astro Meteorology)

இதனால் நாட்டில் அவ்வப் போது ஏற்படும் தட்ப வெப்ப நிலை, புயல், மழை, வெள்ளம், வறட்சி நிலைமை முதலியன அறியலாம். இவ்விஞ்ஞானம் மேலைநாடுகளில் பெருமளவு வளர்ந்துள்ளது.

## 2. ஜன்ம ஜோதிடம் (Natal Astrology)

இம்முறை பிறப்பை ஒட்டி யது. ஒருவருடைய பிறந்த நாள், மாதம், வருடம், நேரம் பிறந்த இடத்தின் அக்ஷாம் சம் (Latitude) ரேகாம்சம் (Longitude) இவற்றைக் கொண்டு ஜாதகச் சக்கரம் வரைந்து, அவரது வாழ்க்கை நிகழ்ச்சி கள் மற்றும் அவரது குணம், நிறம், ஒழுக்கம், சிறப்பியல் புகள், ஆயுள், ஆரோக்கியம், ஆபத்து, விபத்து, பொரு ளாதார நிலை, திருமணம், குழந்தைப்பேறு ஆகியவற்று டன் அவருடைய முன்னேற்றம் முதலியன விளக்கமாக அறிய முடியும்.

நாட்டுநடப்பை அறிய முன் டேன் சோதிடம் (Mundane) மிகவும் பயன்படும். இத னால் நாட்டில் ஏற்படும் அரசி யல் நிலைமை, மக்களின் நிலை, பகைவர் படையெடுப்பினால் ஏற்படும் அழிவு மற்றும் மக்க ளின்நிலை முதலியன விளக்க மாக அறியலாம்.

## கைரேகை

இதுவும் ஜோதிடத்தின் உட் பிரிவு. ஒரு தச்சன் மரத்தி லுள்ள கோடுகளைப் பார்த்து அது என்ன வகையைச் சார்ந்த மரம் என்றும், எவ்வ ளவு காலம் வாழ்ந்தது என் பதைக் கூறுவது போல் ஒரு கிராமத்திலுள்ள விவசாயி தன் மாட்டின் பற்களைப் பார்த்து அது எத்தனை வயதுடை யது என்று கண்டுபிடிப்பது போல், கைரேகைக் கலைஞர் நமது உள்ளங்கையில் அமைந் துள்ள ரேகையைக் கொண்டு நமது கல்வி, செல்வம், ஆயுள் முதலியன எளிதாகக் கூறிவிடு வார். பொதுவாக ரேகைகள் ஒருவருக்கு இருப்பது போல் மற்றவருக்கு அமையாது. அத னால்தான் குற்றம் நடந்த இடத் தில் கிடைக்கும் ரேகை முத்தி ரைகளைக்கொண்டு குற்றவாளி யைக் கண்டுபிடிக்க முடிகிறது.

## எண் கணித ஜோதிடம் (Numerology)

ஒன்றுமுதல் ஒன்பது வரை யுள்ள ஒவ்வொரு எண்ணிற்கும் ஒரு கிரகத்தை கொடுத்தி ருக்கிறார்கள். அதே போன்று ஒவ்வொரு ஆங்கில எழுத்துக் கும் எண்கள் கொடுக்கப்பட் டுள்ளன. ஆனால் ஆங்கில எழுத்துக்களுக்கு ஒன்று முதல்

எட்டுவரைதான் கொடுக்கப்பட்டுள்ளது. ஒன்பதைச் சேர்க்கவில்லை. கால்குலேட்டரிலும் ஒன்று முதல் எட்டு வரை முதவில் அமைக்கப்படுகிறது. ஒன்பது என்பது ஒன்றும் எட்டும், இரண்டும் ஏழும், மூன்றும் ஆறும், நான்கும் ஐந்தும், ஐந்தும் நான்கும், ஆறும் மூன்றும், ஏழும் இரண்டும் எட்டும் ஒன்றுமாக இவ்வெட்டு எண்களே மாறி மாறி வருகிறது. ஒன்பதும் அதற்கு மேல் உள்ள எண்களும் இவ்வெட்டு எண்களின் விரிவாக்கமே. எண் கணித ஜோதிடத்தில் சிறப்பு என்னவென்றால் நமது வாழ்க்கையில் உயர, சிறக்க எண்களைத் தேர்ந்தெடுத்து நமது பிறந்த எண்ணிற்கு ஏற்றவாறு நமது பெயரின் கூட்டு எண்ணை அமைத்துக்கொள்ள உதவும். அதாவது நமது பெயரிலுள்ள எண்களைக் கூட்டி அதனை ஒற்றை எண்ணாக மாற்றும் போது அவ்வெண் நாம் பிறந்த எண்ணிற்கு நட்பு எண்ணாக அமைய வேண்டும். அபபடி நாம் பிறந்த எண்ணிற்கு நமது பெயரின் எண் நட்பாக அமையவில்லையெனின், நமக்கு நாமே பகைவர். நம்முன்னேற்றம் தடைபடும். பெயரெண்ணைக் கொண்டு கோசார பலன் கூறுவதும் உண்டு.

### பிரஸ்ன்ன ஜோதிடம் (Horary Astrology)

ஹோரை ஜோதிடம் எனவும் அழைக்கப்படுகிறது. வராஹ மிஹிரர் தன்னுடைய நூலில் ஹோரா என்பது முன்ஜன்மத்தில் செய்த நல்வினை மற்றும் தீவினை பலன்களைப் பிரகாசப்படுத்துவது என விளக்குகிறார். அஹோராத்ரா என்னும் பதத்தில் அ என்பதையும் த்ரா என்பதையும் நீக்கிவிடில் 'ஹோரா' என்பது மிஞ்சும். அஹஸ் என்னும் சொல்லை நீங்கள் பஞ்சாங்கத்தில் பார்த்திருப்பீர்கள். அஹஸ் என்றால் பகற்பொழுது எனப்படும். ஹோரை ஜோதிடம் பல வேறுவிதமாகக் கணிக்கப்படுகிறது. சிலர் கேள்வி கேட்கும் நேரத்தை லக்ன ஆரம்பமாகக் கொண்டு பலனைத் தீர்மானிக்கின்றனர். சிலர் 108 எண்ணுக்குள் ஒரு எண்ணை கொடுக்கும்படிக்கேட்டு அதற்குண்டான ராசி சக்கரத்தைப் போட்டு பலன் கூறுகிறார்கள். ஆனால் இவை எல்லாவற்றையும் விடச் மிகச் சிறந்தது 'உன்னத நட்சத்திர ஜோதிட' முறை (Advanced Stellar System) என்பதாகும். இம்முறையில் ராசிச்சக்கரம் 249 பிரிவுகளாகப் பிரிக்கப்படுகிறது. அதாவது ஒவ்வொரு நட்சத்திரமும் ஒன்பது உபபிரிவுகளாகப் பிரிக்கப்டுகிறது. ஒவ்வொரு உபபிரிவும், உடுதசை முறையில் உபநட்சத்திராதிபதியாகக் கணிக்கப்படுகிறது. இதனால் பலனைத் திட்டவட்டமாகக்கூற முடிகிறது. ஒன்றிலிருந்து இருநூற்று நாற்பத்தொன்பதிற்குள் ஒரு எண் கொடுத்து தங்கள் பிரச்சனை எதுவாக இருந்தாலும் பலன் கேட்கலாம். உதாரணமாக, திருமணம், மேல்படிப்பு, குழந்தைப்பேறு, நேர்முகத்தேர்வில் வெற்றி, வெளிநாட்டுப்பயணம், கூட்டுவியாபாரம், வீடு, வாகனம், வாங்குதல், காதல் திருமணம், தேர்வில் தேர்தலில் வெற்றி ஆகிய பல கேள்விகளுக்கு இந்த உன்னத நட்சத்திர ஹோரை முறையில் விடை காணமுடியும்.

இந்த ஜோதிட சாஸ்திரத்தின் மூலம் பல நன்மைகள் பெறலாம் என்றாலும் அவரவர்கள் முற்பிறப்பில் செய்த பாவ, புண்ணியத்தை இப்பிறவியில் அடைந்துதான் தீரவேண்டும்.

ஜாதகம் எழுதும் போது முதலில் ஒரு சுலோகம் தவறாமல் எழுதுவார்கள். அது இதுதான்.

**'ஜநநீ ஜந்ம ஸௌக்யானாம்**
**வர்த்திநீ குலஸம்பதாம்**
**பதவீபூர்வ புண்யாநாம்**
**விக்யதே ஜந்மபத்ரிகா!**

இதன் பொருள்: ஒருவன் தன் வாழ்வில் அடையும் செல்வம், குலம், பதவி, புகழ் முதலியன அவன் முற்பிறவியில் செய்த நல்வினையால் அமையும் என்பதாகும். நல்வினை சுகத்தையும், பொருளையும், புகழ், ஆகியவற்றைக் கொடுத்து, மோட்சத்தைக் கொடுக்கும். ஒருவன் தான் செய்த தீவினையின் பயனால் வறுமை, துக்கம், அபகீர்த்தி, நரகம் முதலியன பெறுவான் என்பதாகும்.

தர்மோ ரக்ஷதி ரக்ஷித: தர்மத்தைக் காப்பாற்றுங்கள். அது உங்களைக் காக்கும் என்பதாகும். இது வெளிப்படையான பொருள். இதன் வேறு பொருள் - தர்மத்தைக் காப்பாற்றுவிடில் அதாவது அதர்மமாக வாழ்ந்தால், அந்த தர்மமே உன்னை அழித்துவிடும் என்பது.

முற்காலத்தில் அரசியல் என்றாலே செங்கோலாட்சி அதாவது அறவழியில் செல்லும் அரசு என்று பொருள். பாண்டிய மன்னன் கோவலனைக் கொன்றது குற்றம் என அறிந்தவுடனே உயிர்த்துறக்கிறான். இதனை இளங்கோ அடிகள் 'அரசியல் பிழைத்தாற்கு அறம் கூற்றாவதும்' என்று பாடுகிறார்.

நாம் வெளியில் செல்ல வேண்டும். ஆனால் மழை பெய்கிறது. அப்பொழுது குடையுடன் வெளியே செல்கிறோம். மழையைத் தடுக்க முடியாது. ஆனால் குடையின் உதவியால் நாம் நனையாமல் செல்லலாம். அவ்வாறே எல்லா கஷ்டங்களுக்கும் சாந்தி, பரிகாரம் என்றுண்டு. அவற்றை முழு மனதுடன் செய்தால் இன்பமாக வாழலாம்.



# திருப்பாவையில் 'பறை'

டாக்டர் இரா.வ. கமலக்கண்ணன் - செய்யாறு.

'மின்னனைய நுண்ணிடையார் கூந்தலில் நுழைந்த வண்டு, இசைபாடும் வில்லிப் புத்தூர்' என்று பெரியாழ்வாரால் புகழப்படும் ஊர் ஸ்ரீவில்லிப்புத்தூர். பாண்டிய நாட்டுத் திருப்பதிகள் பதினெட்டினுள் எட்டாவது திருப்பதியாக விளங்குவது இவ்வூர். மல்லிநாடு, புதுவை, தந்விநவ்விய புரம் - என்ற வேறு பெயர்களும் இதற்கு உண்டு. இத்திருப்பதியில் திருவாடிப்பூரத்தில் அவதரித்தவர் கோதைப் பிராட்டியாராவார். இவர் அத்திருத்தலப் பெருமானுக்குச் சூடிக் கொடுத்த பூமாலையில் 'கந்தம்' பொலியும், வேதம் அனைத்திற்கும் வித்தாகப் பாடிக்கொடுத்த திருப்பாவையாகிய பாமாலையில் 'சந்தம்' பொலியும். ஐயைந்தும் ஐந்தும் ஆக முப்பது திருப் பாசுரங்களில் 'பறை' என்னும் சொல் இடம் பெற்றுள்ள பாசுரங்களைப் பற்றியும், அதன் பொருள் பற்றியும் ஆராய்வது நலம்.

## 'பறை' - என்னும் சொல் இடம் பெற்றுள்ள பாசுரங்கள்:-

„ 'நாராயணனே நமக்கே பறை தருவான்' - பாசுரம் 1

„ 'கோதுகலமுடைய பாவாய் எழுந்திராய், பாடிப்பறை கொண்டு'-8

„ 'நாற்றத் துழாய் முடி நாராயணன் நம்மால் போற்றப் பறைதரும்' - 10

„ 'ஆயர் சிறுமியரோமுக்கு அறை பறை மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்'-16

„ 'என்றென்றுன் சேவகமே ஏத்திப் பறை கொள்வான் இன்றுயாம் வந்தோம்' - 24

„ 'உன்னை அருத்தித்து வந்தோம் பறை தருதியாகில்' - 25

„ 'சாலப் பெரும் பறையே' 26

„ 'கூடாரை வெல்லும் சீர்க்கோவிந்தா உன்றன்னைப் பாடிப் பறை கொண்டு' - 27

„ 'இறைவா! நீ தராய் பறையேலோரெம்பாய்' - 28

„ 'இற்றைப் பறைகொள்வானன்று காண் கோவிந்தா! எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு உற்றோமே யாவோம்; உனக்கே நாம் ஆட்செய்வோம்'-29

„ 'திங்கள் திருமுகத்துச் சேயிழையார், சென்றிறைஞ்சி அங்கப் பறை கொண்டவாற்றை' - 30

## பாவை நோன்பு-விளக்கம்

நாடு நல்வளம் குன்றிய போது நல்ல மழை பெய்யவும், கன்னியர் தம் வாழ்க்கைத் துணையாக உத்தம நாயகர்களைப் பெற்று இம்மைப் பயன் பெறவும் வேண்டிக் காத்யாயினீ தேவியைக் குறித்து மார்கழித் திங்கள் முழுதும் நோன்பு நோற்பதும், அதற்காக அக்கன்னியர் அனைவரும் வைகறைப் போதில் எழுந்திருந்து, ஒருவரையொருவர் துயிலுணர்த்திச் சென்று, ஆற்றங்கரையை அடைந்து நீராடி, தேவியின் வடிவம் ஒன்றினை அமைத்துத் தத்தம் எண்ணம் ஈடேறப் பூசனை புரிவதும் பண்டைய மரபு ஆகும். இது திருப்பாவையில் உணர்த்தப்படுகிறது.

'நம் பாவைக்குச் செய்யுங் கிரிசைகள்'- 2

'நம் பாவைக்குச் சாற்றி நீராடினால்' - 3

'பிள்ளைகள் எல்லோரும் பாவைக் களம் புக்கார்' - 13

மார்கழி நீராட்டமும், மழை மண்ணுலகிற்கு வேண்டும் என்பதும், மனத்திற்கியைந்த மணுளனை அடைய வேண்டிப் பாடிச் சிறப்பதும் மேற்போக்காக அமைந்த பாவையின் பாடு பொருளாம். ஆனாலும் ஓர் ஆழ்ந்த உட்பொருள் ஒன்று இப்பாசுரங்களில் அமைந்திருக்கின்றது என்பர் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் அவர்கள்.

" 'நீராடப் போதுமினோ' என்று அழைத்து, மேகத்தை விளித்து 'நாங்களும் மார்கழி நீராட வுலகினில் பெய்திடாய்', என்று மழை பெய்ய நியமிக்கிறுள் ஆண்டாள். இவற்றைப் பார்க்கும் போது நீராடவே இவர்கள் புறப்படுவதாகத் தெரிகிறது. இதுவே உண்மைப் பொருளாகில் இவர்கள் எல்லோரும் கூடி - ஒரு பொய்கைக் கரைக்குச் சென்றிருக்க வேண்டும். இவர்கள் அவ்வாறு ஒரு பொய்கைக் கரைக்குச் சென்று சேர்ந்ததாக ஒரு பாடலிலும் இல்லை. நந்த

கோபருடைய திருமாளிகைக்குச் சென்று, அங்கு கண்ணபிரானைத் துயில் உணர்த்தி, நப்பின்னையை உணர்த்தி, அவர்களைத் தோத்திரம் செய்து, சிற்றஞ்சிறுகாலையெழுந்து இங்கு நாம் வந்தது எதற்காகவெனில் 'உன்றன்னேடு உற்றேமே யாவோம் உமக்கே நாம் ஆட் செய்வோம்' என்று விண்ணப்பம் செய்வதற்காகவே என்று தலைக்கட்டியுள்ளனர். எனவே பல பாசுரங்களில் குறிப்பிடப் பெற்ற நீராட்டமானது, தண்ணீரில் தோய்வதன்று எனவும், பகவானுடன் கலத்தலையும், ஆசாரிய குலத்தில் மூழ்குதலையுமே என்று உறுதி செய்ய முடிகிறது" என்று எழுதி முடிக்கிருர் அவர். 'நீராடப்போதுமீர்' என்றவிடத்துப் பெரியவாச்சான் பிள்ளை கிருஷ்ணஸம்லேஷம் (கலத்தல்) என்று மூவாயிரப்படி வியாக்கியானத்தில் எழுதியுள்ளார். இந்த விளக்கத்தின் அடிப்படையில் பறை என்ற சொல்லாட்சியையும் அதன் பொருள்களையும் இனி நோக்குவோம்.

## 'பறை' - என்னும் சொல்லின் பல்வேறு பொருள்கள்:

பறை - என்னும் சொல்லுக்குரிய பொருள் ஒரு வாத்தியம் என்பதாகும். ஆனால் முற்கூறியுள்ள பாசுரங்களிலும் இச்சொல் வெவ்வேறுபொருளில் ஆளப்பட்டுள்ளது. முதல் பாசுரத்திலும், 29 ஆம் பாசுரத்திலும் இது உள்ளுறைப் பொருளைக கொண்டுள்ளது.

'கண்ணன் கழிலினை நண்ணும்
மனமுடையீர்
எண்ணும் திருநாமம் திண்ணம்
நாரணமே'

என்ற நமமாழ்வார் கருத்துப்படி, நாராயணனே நமககே பறை தருவான் எனறு முதல்பாசுரத்தில் குறிப்பிடுகிருர். இச்சொல்லின் உட்பொருளைப் பின்னர் அறியலாம்.

...'கோதுகலமுடைய பாவாய் எழுந்திராய் பாடிப் பறை கொண்டு'-(8) இவ்விடத்தில், 'பறை முதலிய வாத்தியங்களை எடுத்துக் கொண்டு', என்பது பொருளாகும்.

'நாற்றத் துழாய் முடி நாராயணன்
நம்மால்
போற்றப் பறை தரும்' 10

இவ்விடத்து வேண்டிய 'புருஷார்த்தங்கள்' என்பது பொருள். புருஷார்த்தம் என்பது புருஷன் அதாவது ஆன்மா அடைய வேண்டிய பொருள். இது ஆன்மா பரமபதம் சேர்தலும், பரிபூரண பகவதனுபவம் பெறுதலும் ஆகும். வீடுபேறு எய்திய ஆன்மாக்கள் செய்ய விரும்புவது கைங்கரியமாகும். கைங்கரியமாவது அடிமைத்தன்மை. ஆழ்வார்கள் வற்புறுத்துவது இதுவேயாகும்.

'என்றேன் அடிமை'
நான்முகன் திருவந்தாதி - 95
'அடிமையை ஏற்றுக்கொண்டேன்'

என்று திருமழிசையார கூறுவதைக் காண்க. நம்மாழவாரும்,

'ஒழிவில் காலமெல்லாம் உடனாய்
மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டும்'
-திருவாய்மொழி 3:3:1

என்று அருளியிருப்பதையும காண்க.

.........அறைபறை மாயன்
மணிவண்ணன்' -16

என்னுமிடத்து வாத்தியம் என்பதே பொருள். மணிவண்ணன் ஒலி செய்யும் பறையைத் தருவதாக நேற்றே திருவாய் மலர்ந்தருளினான்.

'என்றென்றுன் சேவகமே ஏத்திப்
பறைகொள்வான்' - (24)



என்னுமிடத்து, உன் வீரச்செயலையே துதித்து தேவரீரை அனுபவிப்பதற்காக, என்று பொருள்.

..உன்னை அருத்தித்து வந்தோம்
பறை தருதியாகில் - 25

இவ்விடத்து தேவரீரை யாசித்து உம் திருவடிவாரத்தில் வந்துள்ளோம். எங்கள் உத்தேச்யத்தைத் தருவீரானால் (நாங்கள் விரும்பியதை) என்பது பொருள்.

சீரிய சிங்கமாகக் கோப்புடைய சிம்மாசனத்தில் எம்பெருமான் (ஆயர் மகளிர் விரும்பியவாறே) வந்து வீற்றிருந்தான். அவனது பேரழகுக்குக் கண்ணெச்சில் பட்டுவிடுமே என்று 'போற்றி'யுரைத்தனர். பின் பெருமான் அப்பெண்களை நோக்கி, 'நீங்கள் என்னிடம் வேண்டி வந்தது யாது'? என வினவ, அவர்கள் "பெருமானே! நாங்கள் வைகறையில் நோன்பு நோற்கச் சில உபகரணங்கள் வேண்டும். சங்குகளும் மிகப் பெரிய பறையும், பல்லாண்டிசைப்பாரும், அழகிய விளக்கும், கொடியும், மேற்கட்டியும் தேவை" என்றனர்.

விழாவிற்குரிய மங்கலப் பொருள்
சங்கங்கள்;
விழா நடப்பதை ஒலித்து அறிவிக்க
பறை;
மங்களா சாசனம் செய்ய-
பல்லாண்டிசைப்பார்;
ஒளிதர-விளக்கு,
விழாவுக்கு அடையாளமாக - கொடி,
பனிமேலே விழாமலிருக்க
விதானம் (மேற்கட்டி).

ஆகியவை தேவை என்றனர். 'இவ்வளவு பொருள்களையும் என்னால் மட்டும் தரமுடியுமா? ' என்று கண்ணபிரான் வினவ, 'நீ ஆலிலைப் பாலகனாய் உலகம் அனைத்தையும் உண்டவன் அன்றோ' என்றனர். 'ஆலின் இலையாய் அருள்' என்றனர் ஆனால், 'பாஞ்சசனியம் உண்டு, மிகவும் பெரிய பறை உள்ளது; பெரியாழ்வார் முதலியோர் பல்லாண்டிசைக்க உள்ளனர்; விளக்கு போன்ற நப்பின்னை இருக்கிறாள்; கருடக் கொடி உள்ளது; நான் குழவியாய் சிறையில் அவதரித்து, கோகுலத்திற்கு என் தந்தையர் என்னைத் தூக்கிச் சென்ற போது, மேலே மழைத்துளி விழாமல் கவிந்து வந்த ஆதிசேடன். இருக்கிறான் - இவைகளை நீங்கள் கொண்டு செல்லலாம்' என்று கூறி, ஒரு வாத்தியத்தை எடுத்துக் கொடுக்கச் சென்றான் மாயன் மணிவண்ணன்.

அதைக்கண்ட ஆயர் சிறுமியர், "கண்ணா! நாங்கள் கேட்டு வந்தது இந்தப் பறையை அன்று" என்றனர்.

'எதிரிகளை வெற்றி கொள்ளும வழக்கமுள்ள கோவிந்தா! உன்னைப் பாடிப் பயனடைந்து (ப்ராப்பியம்)' (இங்கு பறை பயன் என்னும் பொருளில் வந்துள்ளது.) அதன் விளைவாக நாங்கள் பெறும் பரிசு யாதெனில், நாட்டிலுள்ளவர் புகழ்வதற்குத் தகுதியாகவுள்ள

சூடகமே கைவளை,

தோள்வளையே - வங்கி (சங்குச் சக்கரம் பொறித்தல் என்பது உட்பொருள்)

தோடே - கம்மல் (பெரிய திருமந்திரம் என்பது உள்ளுறை)

செவிப்பூவே - மாட்டல் (த்வயம் என்பது உள்ளுறை)

பாடகமே - கால் ஆணி (சரமஸ்லோகம் என்பது உள்ளுறை)

என்று இப்படி வகை வகையான பலவகை அணிகலன்களையும் நாங்கள் அணிவோம். நல்ல பட்டாடைகளை உடுப்போம். பின்னர் முழங்கை வரை வழியும் நெய்யுடைய பாற்சோற்றினை (அக்கார அடிசில்) (சேஷத்துவ ஞானம்) எலலாருமாகக் கூடியிருந்து உண்டு, உள்ளம் குளிர இருப்போம். (போக்தாவான கண்ணனுடன் போக்கியரான ஆயர் பெண்கள் கூடுவது; ஆன்மா பரமாத்வாவைச் சார்ந்திருந்து கைங்கரியம் செய்வது) (27ஆம் பாசுரம்.)

'இறைவா! நீ தாராய் பறையேலோ ரெம்பாவாய்'-(28) 'உனக்கும் எங்களுக்கும் சமமான புருஷார்த்தத்தைத் தர வேண்டும்' என்பது இங்குள்ள பொருள்.

"மிகவும் விடியற்காலையில் வந்து உன்னைப் பணிந்து தொழுது, உன் திருவடிகளைத் துதிக்கும் காரணத்தைக் கோவிந்தனே நீ கேட்பாயாக! மாடு மேய்க்கும் சாதியில் பிறந்துள்ள நீ, எங்களை உன் கைங்கரியத்துக்கு ஏற்றுக்கொள்ளாமல் போகக்கூடாது. பசுக்களைக் காப்பவனே! இன்றைக்கு மட்டும் உன் அருளைப் பெற்று நாளைக்கு விலகிவிடும் நோக்கில் நாங்கள் எங்கள் கோரிக்கையை உன் முன் வைக்கவில்லை. 'என்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்' உன்னோடு ஒன்று சேர்ந்தவர்களாகவே இருப்போம். உனக்கு மட்டுமே அடிமைகளாக அமைந்து பணி செய்வோம். நீ எங்களுடைய மற்ற ஆசைகளை அகற்றிவிட வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்".

'இற்றைப் பறை கொள்வான்
அன்று காண் கோவிந்தா'

'இன்றைக்கு ஒரு பயனை ஏற்று விலகுவோர் அன்று காண் நாங்கள்' - என்பது இவ் விடத்துப் பொருள். ஆயின் பறை என்ற சொல்லின் உள் ளார்ந்த பொருள் யாது?

'காலமுள்ள அளவும் தேவ ரீருடைய எல்லா அவதாரங் களிலும் தேவரீரோடு ஒன்று சேர்ந்தவர்களாகவே இருப்போம்; தேவரீருக்கே நாங்கள் அடிமை (கைங்கரியம்) செய்யக்கடவோம்; எங்களுடைய மற்ற ஆசைகளை அகற்றிடுக' - என்று வேண்டு கின்றனர்.

## இறுவாய்:

"எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்
உன்றன்னோடு
உற்றோமே யாவோம் உமக்கே
நாம் ஆட்செய்வோம்"

என்பதுதான் 'பறை' என்னும் சொல்லின் உட்பொருளாகும். இதை முதற்பாசுரத்திலேயே குறித்த கோதை, இறுதிப்பாசு ரத்திலும்

'...அங்கு அப்பறை கொண்டவாற்றை
அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல்
பட்டர்பிரான் கோதை சொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதும்
தப்பாமே
இங்கு இப்பரிசுரைப்பார் ஈரிரண்டு
மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத்
திருமாலால்
எங்கும் திருவருள் பெற்று
இன்புறுவர். (30)

என்று குறிப்பிட்டுத் தம் திவ் விய பிரபந்தத்தைத் தலைக் கட்டுகிறார். அவரைப்போ லவே நாமும் எம்பெருமானுக்கே என்றும் கைங்கரியம் செய்து நலம் அந்தமில்லதோர் நாடு அடைந்து உய்வோமாக.

ஸ்ரீஆண்டாள் திருவடிகளே சரணம்.





## செய்திச் சுருக்கம்

### திருமலையில்

திருமலையில் ரூ. 1 கோடி செலவில் கட்டப்படவிருக்கும் அஹோபில மடம் கட்டிட வளாகத்திற்கு, அம்மடத்தின் ஜீயர் சடகோப ஸ்ரீநாராயண யதீந்திர மஹாதேசிகன் அவர்கள் அண்மையில் அடிக்கல் நாட்டினார். மேலும் திருமலையில் நடைபெற்ற 'மகாவிஷ்ணு யாக'த்திலும் பங்கு பெற்றார்.

மைசூரைச் சார்ந்த பரகால மடத்தின் தலைவர் ஸ்ரீஅபிநய வாகீஸ பிரம்ஹதந்த்ர ஸ்வதந்தர பரகால சுவாமிஜி அவர்கள் அண்மையில் 'மகாவிஷ்ணு யாக'த்தில் கலந்து கொள்ளும் வகையில் திருமலைக்கு வருகை புரிந்தார். அப்போது திருமலை பரகால மடத்தின் புதிய கட்டிட வளாகத்திற்கு அடிக்கல் நாட்டினார். பின்னர் திருமலைக்கோயிலில் 'மங்களா சாஸனம்' செய்தார். அதற்கு முன்னர் திருச்சானூர் ஸ்ரீமத்வாவதி தாயார் மற்றும் திருப்பதி ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி கோயில்களுக்கும் வருகை புரிந்து அக்கோயில்களில் 'மங்களாசாஸனம்' செய்தார்.

* * *

### மற்றைய செய்திகள்

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் வைப்பு நிதியாக ரூ. 180 கோடி பல்வேறு தேசிய வங்கிகளில் சேமிக்கப்பட்டுள்ளது என்று தி.தி.தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. ஏ. செங்கல ரெட்டி அவர்கள் அண்மையில் ஒரு பத்திரிகையாளர் கூட்டத்தில் கூறினார். இது இல்லாது ரூ. 14 கோடி ரூபாய் தனியாக திருப்பதியிலுள்ள 'ஸ்விம்ஸ்' எனும் நவீன மருத்துவமனைக்கு ஒதுக்கப்பட்டுள்ளது என்றும் குறிப்பிட்டார். இவ்வாண்டு அக்டோபர் மாதம், திருமலையில் நடைபெற்ற வருடாந்திர பிரம்மோத்ஸவம் மற்றும் உலக அமைதிக்காக நடைபெற்ற "மகா விஷ்ணு யாக"த்தின் போது திருமலைக்கு நாள்தோறும் 70,000 யாத்திரிகர்கள் வருகை புரிந்தனர். இதனால், இம்மாத கோயில் வருமானம் ரூ. 1.5 கோடியாக அமைந்தது.

* * *

விரைவில் சென்னையில், தமிழக அரசினால் வழங்கப்படுவதாக இருக்கும் மனையில், தி. தி. தேவஸ்தானத்தாரின் தகவல் மையம் மற்றும் திருமண மண்டபம் ஒன்று கட்டப்பட உள்ளது.

* * *

ஆந்திர மாநிலத்திலுள்ள விசாகப்பட்டினத்தில் கடற்கரையை எதிர்நோக்கியிருக்கும் 'கைலாஷ்' குன்றுகளின் மேல் நூலகத்துடன் இணைந்த தியான மண்டபம் ஒன்று ரூ. 10.5 இலட்சம் செலவில் கட்டப்படும்.

* * *

திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீபத்மாவதி மகளிர் நுண்கலைக்கல்லூரிக்கென முதல்தள கட்டிடத்திற்காக ரூ. 85 இலட்சமும், ஸ்ரீபத்மாவதி மகளிர் இளநிலைக்கல்லூரிக்கென மேஜை, நாற்காலி சாமான்களை வாங்குதற்காக ரூ. 17 இலட்சமும் ஒதுக்கப்பட்டுள்ளது.

* * *



தனி ஆந்திர மாநில பிறந்தநாளை முன்னிட்டு புதுதில்லியில் 'ஆந்திர பவன்'த்தில் திறக்கப்பட்ட தி.தி. தேவஸ்தான சமய நூல் விற்பனை அரங்கினை ஆந்திர மாநில ஆளுநர் திரு. கிருஷ்ணகாந்த் மற்றும் தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் திரு. சேஷகிரிராவ் ஆகியோர் பார்வையிட்டபோது.

Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor-Incharge and
Printed at T.T.D. Press by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

